# CHIDAMBARAM
# SRI NATARAJA TEMPLE.





★ சிதம்பரம் ★

# ஸ்ரீ நடராஜர் கோயில் சரித்திரம்.


சாஸ்த்ராசார்ய பண்டித ராஜா

ஸோமசேகர தீக்ஷிதர், சிதம்பரம்.



விலை] 1967 [ரூ. 1-50.

ஸ்ரீ நடராஜர் ஆவணி மஹாபிஷேக வெளியீடு.

உ

# சிதம்பரம்
# ஸ்ரீ நடராஜர் கோயில் சரித்திரம்.

★


*தொகுத்தவர் :*

சாஸ்த்ராசார்ய பண்டித ராஜா

ஸோமசேகர தீக்ஷிதர்,

சிதம்பரம்.


*


*வெளியிட்டவர் :*

சதுச்சாஸ்த்ர சிரோமணி

ஸோம. ஸேது தீக்ஷிதர்,

ஸம்ஸ்க்ருத ரிஸர்ச் ஸ்காலர், ஸுஹ்ருத்ஸபா ப்ரதாநாத்யாபகர்,

சிதம்பரம்.

*

*அச்சிட்டவர் :*

ஸ்ரீமான் K. V. பக்கிரிசாமி பிள்ளை,

வெற்றிவேல் பிரஸ் உரிமையாளர்,

தஞ்சாவூர்.

1967.

## தொகுப்பாளரின் மற்றேனைய வெளியீடுகள்

1 ஸ்ரீ நடராஜ ஸஹஸ்ரநாம பாஷ்யம்
2 பாகங்கள் ... 4—00

2 ஸ்ரீ நடராஜ ஸஹஸ்ர நாமாவளி .... 1—00

3 ஸ்ரீ நடேசாஷ்டகம் (தமிழ் உரையுடன்)
ஆனந்தகிரி சங்கர விஜயம் ... 1—00

4 ஸ்ரீ நடேச ஸ்துதி (தமிழ் உரையுடன்) .... 1—50

5 சிதம்பரம் கோயில் ஆராய்ச்சிக் கட்டுரை) 0—50

கிடைக்குமிடம் :—

ஸுஹ்ருத் ஸபா,
1, தெற்கு வீதி, சிதம்பரம்

வெற்றிவேல் சபாநாயகம்,
(பஸ் ஸ்டாப்புக்கு எதிரில்)
தெற்கு வீதி, சிதம்பரம்.



சாஸ்த்ராசார்ய பண்டித ராஜா

ஸோமசேகர தீக்ஷிதர்,

சிதம்பரம்.

உ

சிவமயம்

ஸ்ரீ சித்ஸபேசாய மங்களம்.

# முன்னுரை.

---

இப்பூமண்டலத்திலே சிதம்பரமென்னும் புண்ய ஸ்தலம், வேதங்களிலும், சாஸ்த்ரங்களிலும், புராணங்களிலும், ஆகமங்களிலும், தேவாரங்களிலும் மிகப் போற்றப்பட்டது. இந்த ஸ்தலம் விராட்புருஷனுடைய ஹ்ருதய ஸ்தானமாகையால் ஹ்ருதயம் புருஷனுக்கு ப்ராண ஸ்தானமாகையால், எல்லா இந்திரியங்களும் தூக்க ஸமயத்தில் ஹ்ருதயத்தை அடைவது போல், விழிப்பில் ஹ்ருதயத்திலிருந்து வெளிவருவதுபோல், அனுபவத்திலும் சாஸ்த்ரங்களிலும் பிரகாசமானது. அது போல் எல்லா ஸ்தலங்களும் நிசியில் சிதம்பரத்தில் வந்து சேருகின்றன. காலையில் சிதம்பரத்திலிருந்து அந்தந்த ஸ்தானங்களை அடைகின்றன என்பது சாஸ்த்ர ஸம்மதமும் ந்யாயமுமாகும். ஆகையால் இச்சிதம்பர க்ஷேத்ர தர்சனமானது பூமண்டலத்திலுள்ள எல்லா மூர்த்திகளுடைய தர்சன பலத்தைத் தருகின்றது என்பது உண்மையே. ஆகையால் அந்த தர்சனத்தை அந்தந்த மூர்த்தியினுடைய மஹிமையைத் தெரிந்து செய்தால் அதிக பலனைத் தரும். ஆகையால் இந்தச் "சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் கோயில் சரித்ரம்" என்ற நூல், மஹாபாரதம், சிதம்பர பஞ்ச மாஹாத்மியங்கள், சிதம்பர ரஹஸ்யம், சிதம்பர தத்வ நிர்ணயம், உபனிஷத்துக்கள் ஸூத ஸம்ஹிதை, ஸபாபதி விலாஸ நாடகம், பெரிய புராணம், திருமந்திரம், திருவாசகம், கோயிற் புராணம், பெரியோர்களுடைய பரம்பரையாக வந்த சில சிறந்த கருத்துகள் ஆகியவைகளை ஆராய்ச்சி செய்து மிகச் சுருக்க முறையில் எழுதப்பட்டுள்ளது. இதை ஆஸ்திக பண்டிதர்கள் நன்ருகப் படித்து சிதம்பராலய தர்சனம் செய்து ஸ்ரீ நடராஜருடைய பரிபூர்ண

கிருபையால் விசேஷ க்ஷேமலாபங்களை அடைய விரும்புகிறோம். இந்நூலுக்கு அணிந்துரை அன்புடனும் பக்தியுடனும் அளித்த அறநிலையப் பாதுகாப்பு உதவி கமிஷனர் ஸ்ரீமான் **A. சிதம்பரம் பிள்ளை B. A. B. L.** அவர்களுக்கும், சிதம்பரம் ஸ்ரீமான் **S. V. கல்யாணராம பிள்ளை** அவர்களுக்கும் சிறந்த முறையில் சிறுவுரையும் எழுதி வெளியிட்டுக் கொடுத்த தஞ்சை வெற்றிவேல் பிரஸ் உரிமையாளர் ஸ்ரீ **K. V. பக்கிரிசாமி பிள்ளை** அவர்களுக்கும் பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி னன்மை கடலிற் பெரிது என்ற முறையில் எங்கள் ஸந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்வதுடன் ஸ்ரீ நடராஜர் அருளால் ஸர்வ ஸௌபாக்யங்களும் கிடைக்க ஆசீர்வதிக்கின்றோம். எல்லாம் வல்லஸ்ரீ நடராஜர் கிருபை.

சதுச்சாஸ்த்ர ச்ரோமணி
**ஸோம சேது தீக்ஷிதர்,**
No. 100. தெற்கு வீதி, சிதம்பரம்.

பிலவங்க ஆவணி 2,
வெள்ளிக்கிழமை
ஸ்ரீ நடராஜர் மஹாபிஷேக தினம்
18—8—1967.

———

# "அணிந்துரை"

**திரு. ஏ. சிதம்பரம் பி. ஏ பி. எல்.**
துணை ஆணையாளர்,
**இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34.**

---

சிதம்பரம் சாஸ்த்ராசார்ய பண்டித **ராஜா சோமசேகர தீக்ஷிதர்** அவர்களால் தொகுக்கப் பெற்று, வ்யாகரண, ந்யாய, வேதாந்த, மீமாம்ஸா சதுச்சாஸ்த்ர சிரோமணி **சோம. சேது தீக்ஷிதர்** அவர்களால் பதிப்பிக்கப்பட்ட **"சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் கோயில் சரித்திரம்"** என்னும் நூலைப் பார்வையிட்டேன்.

அதன்கண் சிதம்பரம் கோயில் வரலாறும், அமைப்பு முறையும், அங்கே எழுந்தருளி விளங்கும் தெய்வத் திருவுருவங்கள் பற்றிய சுலோகங்களும், தத்துவங்களும், பொருள்களும், நன்கு இனிது தொகுத்து எளிய நடையில் தரப்பெற்றிருக்கின்றன.

ஸ்ரீ நடராஜரின் ஸன்னிதான கோபுரமாகிய தெற்கு கோபுர வாயிலாய் உள்சென்று ஸ்ரீ நந்திகேசர் முதற்கொண்டு வரிசைக் கிரமமாக எல்லா சந்நிதிகளிலும் தரிசித்து, கிழக்கு கோபுர வாயிலாய் வெளிவரும்வரை உள்ள விவரங்களுக்கும், நிகழ்ச்சிகளுக்கும், தக்க விளக்கம் வரைந்திருக்கிறார்கள். ஸ்ரீ நடராஜமூர்த்தி, ஸ்ரீ சிவகாமஸுந்தரி, ஸ்ரீ ரகசியம், கனக சபை, சித்சபை இவற்றின் தத்வங்கள் நன்றாக விளக்கப்பட்டிருக்கின்றன.

சிதம்பரம் கோயிலைப்பற்றிய செய்திகள் பலவற்றையும் அறிந்துகொள்வதற்கு இந்நூல் பக்த கோடிகளுக்குப் பெரி

தும் பயன்படும். இச் சிறந்த நூலைத் தொகுத்தும், பதிப் பித்தும், அச்சிட்டும் உதவிய பெருமக்களின் தொண்டு மிக வும் போற்றிப் பாராட்டுதற்குரியது.

**A. சிதம்பரம்,**
*4—5—67.*

---

உ

அன்பே சிவம்

# அணிந்துரை.

**செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்**
**செல்வ மதிதோய செல்வ முயர்கின்ற**
**செல்வர் வாழ் தில்லை சிற்றம்பலமேய**
**செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே.**

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றினாலும் சிறப்பித்து விளங்குவது சிதம்பரமெனும் திவ்ய தலமாகும். கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராமே செற்றார் வாழ் தில்லை எனவும் திருஉடை அந்தணர் வாழ்கின்ற தில்லை சிற்றம்பலவன் திருவடியைகண்ட கண்கொண்டு மற்றதனை காண்பதென்னே எனவும் உரிமையால் பல்லவர்க்கு திறை கொடா மன்னவரை மருக்கம் செய்யும் பெருமையார் புலியூர் சிற்றம்பலத்தெம் பெருமானைப் பெற்றோம் என்றோ எனவும், சிந்தைதனை தெளிவித்து சிவமாக்கி எனையாண்ட அந்தமிலா ஆனந்தம் அணிகொள் தில்லை கண்டேனே என முறையே நால்வர் பெருமக்களால் போற்றப் பெற்ற இத்தலத்தில் விளங்கும் ஆலயத்தினுள் எண்ணற்ற மூர்த்தங்கள் தம்மை வணங்கும் அடியார்க்கு அனுக்ரஹித்து வருவதை நாமனைவரும் அறிவோம். இருப்பினும் பல்லோர்க்கு இம்மூர்த்தங்களின் வரலாறு தெரிவதில்லை, தெரிந்துகொள்வதுமில்லை. இந்நிலையைப் போக்க, கற்றறிந்த, பிறர் நிலையை அறிந்த பிரம்மஸ்ரீ சாஸ்த்ராசார்ய **ராஜா ஸோமசேகர தீக்ஷிதர்** அவர்கள் இவ்வாலயத்தில் அடங்கியுள்ள பல்வேறு மூர்த்தங்களின் வரலாற்றைத் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார். இப் புத்தகத்தைக் கையில் வைத்துக்கொண்டு அதில் கூறியுள்ளபடி இவ்வாலயத்தைப் பிரதக்ஷிணம் செய்து வருவோமாயின் முறைப்படி இவ்வாலயத்தைத் தரிசித்த பலனை நிச்சயமாக ஒவ்வொருவரும் அடைய முடியும். இத்தகையதொரு அறிய முயற்சி இது

வரை யாவரும் முயன்றதாகத் தெரியவில்லை. பல விநாயக மூர்த்தங்கள் உள்ளன. ஒவ்வொரு விநாயகரும் ஒரு சிறப்பான அமைப்புடனும், ஒரு குறிப்பிட்ட அநுக்ரஹத்தைத் தம்மை வழிபடுவோருக்கு அருளவும் அமைந்துள் நுட்பம் படித்து இன்புற்று பயனடையும் வகையில் அமைந்துள்ளது மிகப் போற்றுதற்குறியது. பஞ்ச சபைகளின் விபரங்களும், குறிப்பாக சித்ஸபையும், அதனுள் அமைக்கப்பட்டுள்ள ஸ்ரீ ரகஸியம், ஸ்ரீ சந்திரமௌலீச்வரர், ஸ்ரீ ரத்தின சபாபதி, ஸ்ரீ முகலிங்கம், ஸ்ரீ சிவபாதுகை, ஸ்ரீ ஸ்வர்ண காலபைரவர் ஆகியவற்றின் தத்வார்த்தங்கள், நுட்பங்கள் படித்து மகிழ்தற்குரியன.

இச்சிரிய முயற்சி மிக மிகப் போற்றுதற்குரியதாகும். பிரம்மஸ்ரீ சதுச்சாஸ்திர சிரோமணி பண்டித **ராஜா ஸோம ஸேது தீக்ஷிதர்** அவர்கள் இன்னும் விரிவாக இந்நூலை அடுத்த பதிப்பில் பதிப்பித்து எல்லாம் வல்ல ஸ்ரீமந் நடராஜப் பெருமான் திருவருளுக்குப் பாத்திரமாகுமாறு தில்லைக் கூத்தனை நான் அடிபணிந்து பிரார்த்திக்கின்றேன்.

**Phone No. 47.**

சிதம்பரம்,
*1—8—67.*

இப்படிக்கு,
**S. V. கல்யாணராமன்.**

# நமது சிறுவுரை.

ஆனந்த வெள்ளத்து அழுந்தும் ஓர் ஆருயிர் ஈருருக்கொண்டு
ஆனந்தவெள்ளத் திடைத்திளைத்தால் ஒக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத்து அறைகழலோன் அருள்பெற்றவரின்
ஆனந்தவெள்ளம் வற்ருது முற்ருது இவ் வணிநலமே.

அன்று பிரளயத்தின்பின் சிவபெருமான் அம்மையப்பன் உருவில் நின்று ஆடிய ஆனந்தத் தாண்டவத்தில் தோன்றிய அணுக்கள் ஆங்காங்குள்ள ஜீவ அணுக்களைத் தாக்க, அவைகள் மானிட உருக்கொண்டதாய்க் கூறும் சாத்திரங்கள். தோன்றிய ஆன்மாக்களை கடைத்தேற்றுவான் பொருட்டு தில்லைப் பரவெளியில் என்றும் ஆடுவதாக சான்ருேர்கள் இன்றும் தில்லை சென்றபோது கண்டு களிக்கின்ருர்களெனினும், நம்மனோர் அத்திருமேனியையாவது காணும் பாக்கியம் பெற்ருேம். பூசனை புரிந்து சிலம்பொலி கேட்ட சேரமான் பெருமான் "பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி" என்ருர். ஆனல் நாம் எப்பூசனையுமின்றி பொன் வண்ணமாகிய மேனியைத் தில்லையிலேயே கண்டு களிக்கின்ருேம். எண்ணிறந்த மெய்யன்பர்கள் கூட்டமே எப்போதும். அன்று 'வானமளந்தது மாயோன் திருவடி..........." என்ருர் சிதம்பரர். இன்று தில்லையை அளப்பது மெய்யன்பர் கூட்டத் திருவடியே என்று நாமும் பாடலாம். கொலையாதி செய்தவராயினும் அன்பு, குணம், பொறுமை இல்லாமுளத்தினராயினும், தில்லைக் காற்றின் அலைமோதப்படின் போதுமென்ருற் போதாதோ. அறிவிற் சிறிய எம் போன்ருர் புகழ்ந்து சொல்ல வகையறியேம். வெள்ளை உள்ளமுடையார் தனித்திருந்து தில்லைஉள்ளவனை நினைக்குங்கால் தனக்கும் அவ்வாறு ஆடவருகிறது என்று கூறுவதைக் கேட்கும் நம் உள்ளம் மட்டும் கூட ஆடாமலிருக்குமா? இத்துணைச் சிறப்புடைய அத்துணைப் பெரிய ஐந்து பேரம்பலங்களையும் அதிற்பொலிவுறும் பொருளையும்பற்றி, பாமரரும் அறியுமாறு எழுதும் பாக்கியம்

நமது பிரம்மஸ்ரீ சாஸ்த்ராசார்ய பண்டித **ராஜா சோம சேகர தீக்ஷிதர்** அவர்கள் அடைந்தார்கள் என்பதுமட்டும் பொருந்தாது. அவரும் அன்னார், அன்புடைக் குடும்பத்தின் அனைவருமே சேர்ந்தெழுதியது என்றுமட்டும் சொன்னாலும் போதாவே. எத்துணைச் சிரமம்; ஆராய்ச்சி; இத்துணையும் சேர்ந்து மக்கள் பயன்கருதி ஆக்கிய தீக்ஷிதர் அவர்களையும் இம்மாதிரி ஆக்கவைத்த ஆடவல்லான் அருட்செயலையும் போற்றுகின்றோம்.

"இழுத்துச் செத்தாலும் புழுத்துச் செத்தாலும் சிதம்பரத்தில் சாவு" என்பதை யோர்ந்து "தரிசிக்க முக்தி" என்பதை நினைந்து தில்லைபுக்கும் எல்லோருக்கும் இப்புத்தகம் பெரிதும் பயன்படும்.

தஞ்சை
8—8—67.

K. V. பக்கிரிசாமி பிள்ளை
வெற்றிவேல் பிரஸ்.

---



உ

ஸ்ரீ சித்ஸபேசாய மங்களம்.

திருச்சிற்றம்பலம்.

# சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் கோயில் சரித்ரம்.

---

கல்யாணே ல்லாஸஸீமா, கலயது குசலம் தாண்டவே நாபிராமா,
காசித் சித்வ்யோம தாமா, பவகஹனகதிக்லாந்தி ஹாரிப்ரணுமா |
ஸௌந்தர்ய ஹ்ரீண காமா, ஹிமகிரி தனயா ஸாதராபாங் கதாமா
திக்ஷுப்ரக்யாத பூமா திவிஷதபினுதா தேவதா ஸோமாநாமா ||

இமயமலையின் தாழ்வரையில் மஹரிஷிக் கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு ஆசிரமத்தில் மத்யந்தினர் என்ற ஸர்வக்ஞரான ஒரு மஹரிஷி இருந்தார். அவருக்கு "மாத்யந்தினி" என்ற ஒரு புதல்வன் இருந்தான். அவனுக்கு உபநயனம் செய்வித்து ஸம்பூர்ணமாக வேத சாஸ்திரங்களையும் கற்பித்தார். புத்திரனுக்கு வரப்போகின்ற பாக்கியங்களை யறிந்து குமாரனுக்கு இவ்விதமாக உபதேசித்தார் :—

"ஓ குமாரனே ! இந்த பூமண்டலத்தில் பூலோக கைலாசம் என்று பிரஸித்திப் பெற்றதும் "விராட் புருஷனுடைய ஹ்ருதய புண்டரீக ஸ்தானம்" என்று ஜாபால உபநிஷத் ஸூத ஸம்ஹிதை, முதலிய உண்மை நூல்களால் கூறப்பட்டதும், ஆகையினலேயே அவ்விடத்தில் சித்ஸபையில் ஸ்ரீ நடராஜ மூர்த்தியைத் தரிசித்த எல்லா பிராணிகளுக்கும் பெரிய மஹாயோகிகளால் அனுஷ்டிக்கக் கூடிய தஹரோபாஸனம் என்கிற பெரிய யோகத்தின் மஹாபலம் ஸுலபமாகக் கிடைக்கிறதென்று மேற்படி நூல்களால் போற்றப்படுகிறதும், பிர்ம தேவருடைய உபதேசத்தால் வால்கலி என்ற

அஸுர விஜயத்திற்காக இந்திரன் தவம் புரிந்து சீக்கிரத்தில் ஸித்தி பெற்ற ஸ்தலமாயும், சிதம்பரம் புண்டரீகபுரம், வியாக்ரபுரம் ஹேமஸபாநாதபும், தில்லைவனம் என்ற பெயர்களால் புராணங்களில் போற்றப்படுவதுமான திவ்ய க்ஷேத்ரம் ஒன்று உண்டு. அவ்விடம் போய் ஸ்ரீ மூலநாதருடைய ஸந்நிதியில் தவம் செய்து சுப பலன்களை அடைவாயாக" என்றவாறு. இந்த உபதேசத்தைக் கேட்ட குமாரன் நல்ல தினத்தில் தகப்பனாரிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டு பஞ்சாக்ஷர மஹாமந்திரத்தின் ஸஹாயத்தினாலேயே அநேக தேசங்களையும், மலைகளையும், நதிகளையும் தாண்டி தில்லை வனத்தை யடைந்து ஸ்ரீ மூலநாதருடைய திவ்ய ஸந்நிதியில் சாஸ்த்ர முறை தவறாமல் தகப்பனாரின் உபதேசப்படி தவம் செய்து வந்தார்.

ஒருசமயத்தில் பூஜைக்குவேண்டிய மலர்களை எடுக்கும் ஸௌகர்யத்திற்காக புலிக்கால், புலிக்கைகளைப் பகவானிடம் வரத்தால் பெற்று வியாக்ரபாதர் என்ற பெயரையும் அடைந்தார். பிறகு ஆதிசேஷாவதாரமான பதஞ்சலி முனிவரின் மித்ர லாபத்தையும் அடைந்து தில்லைவனத்தில் அனாதி காலமாய் வஸிக்கின்ற ஸ்ரீமந் நடராஜமூர்த்திக்குச் சமானமாயுள்ள தில்லைவாழ் அந்தணர்கள் என்ற த்ரிஸஹஸ்ர முனிச்வரர்களுடன் தைமாதம் குருவாரம் புஷ்ய நக்ஷத்ரம் பௌர்ணமி சேர்ந்த புண்ய தினத்தன்று நடுப்பகலில் ஸ்ரீமந் நடராஜமூர்த்தியின் ஆனந்த தாண்டவ தர்சனம் செய்து வஸித்து வந்தார்.

பிறகு தந்தையின் உத்தரவினால் வஸிஷ்ட மஹரிஷியின் ஸகோதரியை விவாஹம்செய்து உபமன்யு என்ற லோகோத்தரனான குமாரனையும் அடைந்தார். வஸிஷ்ட முனிவரின் ஆச்ரமத்தில் காமதேனுவின் பாலையும், பிறகு தில்லைவனத்தில் தந்தையின் ஆச்ரமத்தை யடைந்து ஸ்ரீமூலநாத பகவானின் அருளால் திருப்பாற் கடற் பாலையும் அருந்திவந்த விசே

ஷத்தால் மஹாஞானியாயும், மஹாபண்டிதராயும், மஹா பக்தசிகாமணியாயும் பிரகாசித்து வந்தார்.

உபமன்யு முனிவருடைய ஞான விசேஷத்தை யறிந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான் துவாரகாபுரியிலிருந்து ஸத்யபாமா என்ற மனைவியுடன் தில்லைவனம் வந்து உபமன்யு மஹரிஷியிடம் சிவ பூஜோபதேசம் செய்துகொண்டு முறைப்படி சிதம்பர ஆலயத்தில் தர்சனம்செய்து வரும் ஸமயம் தன்னுடைய ஸத்யபாமாவுக்கு ஆங்காங்குள்ள மூர்த்தி தீர்த்த பூஜைகளின் விசேஷங்களை பிரியத்துடன் செய்த உபதேசத்தை அருகில் நின்று கேட்டு வந்த ஒரு வித்யாதர சிவபக்தனான "மணிபத்ரன்" தன் மனைவியான கலாவதியுடன் சிவகங்கா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஸ்ரீ கிருஷ்ண பகவானிடமிருந்து தெரிந்து கொண்ட விசேஷங்களை தம் மனைவிக்குச் சொல்லி வருகிறார்.

"ஓ கலாவதி" சிவகங்கை என்ற இந்த புண்ய தீர்த்தம் காசி க்ஷேத்திரத்திலுள்ள கங்கையைவிட மேலானதாக புராணங்கள் கூறுகின்றன. ஸூத ஸம்ஹிதையில் தீர்த்த மாஹாத்மியத்தில் இந்த சிவகங்கையின் மஹிமை விவரிக்கப் பட்டிருக்கிறது. இது ஸ்ரீ நடராஜமூர்த்தியின் சூலாயுதத்தால் உண்டுபண்ணப்பட்டது. தாண்டவ ஸமயத்தில் சிரஸிலிருந்த கங்கையிலிருந்து பெருகிய ஜலத்தால் நிரம்பியது கௌட தேசத்து மன்னனான ஹிரண்யவர்மன் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தனது குஷ்டரோகத்தை நிவர்த்தி செய்து கொண்டு பொன்வடிவம் பெற்று ஹிரண்யவர்மன் என்ற பெயரைப் பெற்றான். இந்த தீர்த்தம் ஸ்ரீமந் நடராஜ மூர்த்தியின் ஸ்வரூபமாகும். இக்கருத்தை சிவகங்கையின் மேற்கு கரையிலுள்ள சிவலிங்கமூர்த்தி பிரகாசிக்கச் செய்கிறார். ஸ்ரீ நடராஜருடைய ஆறு அபிஷேக காலங்களிலும் மகா வைதிகோத்தமர்களான தீக்ஷிதர்கள் இந்த லிங்கத்திற்கு பூஜை செய்து வருகிறார்கள்.

## தெற்கு கோபுரம்

நமாமி கோபுராணீச தவமூர்த்யந்த ராண்யஹம் |
த்தயபபரயா பக்த்யாமுக்தயே நடநயாக ||

கடவுளின் ஸ்தூலரூபம் "கோபுரம்" என சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதை முதன் முதலில் தரிசிப்பது எங்கும் நிறைந்துள்ள பரமசிவனின் சிறப்பை அறிவுறுத்துவதாகும். சிதம்பர மாஹாத்மியத்தில் "நமாமி கோபுராணீச தவமூர்த் யந்தராணிவை" என்று கூறப்பட்டுள்ளது. அன்னமய கோசப்ராகாரத்தில் கோபுரம் அமைந்துள்ளது. ஆனி மீ மார்கழிமீ இந்த மஹோத்ஸவ த்வஜாரோஹண தினத்தில் இக்கோபுரத்தில் காஷாயக் கொடி (வைராக்ய போதகமாக) பறக்க விடப்படுகிறது. ஸ்ரீ நடராஜரின் சன்னிதான கோபுர மாகையால் இதற்கு மட்டும்தான் காவிக்கொடி கட்டுவது விசேஷமானதாகும். இக்கோபுரத்தில் இறந்தவர்களின் மோக்ஷ லாபத்திற்காக மோக்ஷ தீபங்கள் ஏற்றப்படுகின்றன.

## ஸ்ரீ நந்திகேசர்

நந்திகேச ! மஹாபாக ! சிவத்யான பராயண ! |
நடேச்வரஸ்யஸேவார்த்தம் அனுக்ஞாம் தாதுமர்ஹஸி ||

சிவகணங்களின் தலைவர் அபரபரமேச்வரர் என புகழப் படுபவர். இவரது அநுக்ஞையை அடைந்த பிறகே சிவதர் சனம் செய்யவேணடும் என்பது சாஸ்திரங்களின் கருத்து. அதனை நினைவுறுத்தவே தெற்கு கோபுர முன்னிலையில் நந்திகேச்வரருக்கு ஸ்தானம் அமைந்துள்ளது. இவரது அரு ளால் சிவதர்சனம் சுலபமாகவும் பயனளிப்பதாகவும் ஆகும் என்பது துணிபு.

## ஸ்ரீ ஜயன்

ஜயாய, ஜயரூபாய, கோபுரத்வார வர்த்தினே |
ஜயதாய, நடேசான ரக்ஷகாய நமோஸ்துதே ||

தெற்கு கோபுரத்தின் மேற்புறத்தில் இருக்கும் இவர் துவாரபாலகரான ஜயன் என்ற பெயர் உள்ளவராவார்.

### ஸ்ரீ விஜயன்

**விஜயாய நமஸ்துப்யம், பக்தேப்யோ, ஜயதாயினே |**
**மஹேசானத்வார ரக்ஷாம், குர்வதே, பயஹாரிணே ||**

மேற்படி கோபுரத்தின் கீழ்புறத்தில் இருக்கும் இவர் துவாரபாலகரான விஜயன் என்ற பெயருள்ளவராவார்.

## ப்ராணமய கோசப்ராகாரம்

### ஸ்ரீ கணேசர், ஸ்ரீ குருமூர்த்தி

**தக்ஷிணாபிமுகம், தேவம், கணேசம், குருமேவச |**
**விக்னானாம், ச விநாசாய, வித்யாலாபாய ச, ஸ்தும: ||**

தெற்கு முகமாய் வீற்றிருக்கும் மூர்த்திகள் கணேசரும், குருமூர்த்தியும் ஆவர். சிவதர்சனத்திற்குமுன் கணேச குருவழிபாடு அவசியம் என அறிவுறுத்துகிறது.

### ஸ்ரீ கார்த்திகேயர்

**உத்தராபிமுகம், ஸ்கந்தம், கார்த்திகேயம் மஹாப்ரபும் |**
**வந்தே, வாஞ்சிதலாபாய, ஸ்த்ரீணாம், ஸ்தன்யப்ரவர்த்தகம் ||**

வடக்கு முகமாக தெற்கு கோபுரத்தில் அமைந்திருப்பவர். இவரது வழிபாட்டால் பெண்களின் ஸ்தன்ய க்ஷீராபி விருத்தி ஏற்படுமென பெரியோர்களின் வாக்கு.

### ஸ்ரீ முக்குருணி விநாயகர்

**மங்களம், திசது, மே, கஜானன: மங்களம், திசது, மே, கணேச்வர: |**
**மங்களம், திசது, மே, விநாயக:, மங்களம், திசதுமே, மஹேச்வர: ||**

நிர்ரிதி திக்கில் கிழக்கு முகமாய் பிரகாசிப்பவர் முக்குருணி விநாயகர். பன்னிரண்டு படி அரிசியால் ஆயிரம்

மோதகம் செய்து பூஜை செய்ய வேண்டும் என்பதை "முக்குறுணி" என்ற பதத்தால் அறியலாம். இந்த அர்த்த விசேஷத்தை ஸ்ரீ கணபதி உபநிஷத்திலும் காணலாம். நான்கு புஜங்களுடனும் மகோதரராகவும் யானைமுகம் பொருந்தியவராகவும் அழகாகவும் காட்சியளிக்கிறார். இவருக்கு முன்னிலையில் இவரது வாகனமான மூஷிகம் தோற்றமளிக்கிறது. இத்தகைய சுந்தர மஹா கணபதி வேறெங்கும் இல்லை என்பது திண்ணம். இக்கணபதியின் முன்னிலையில் ஆயிரத்தெட்டு அல்லது நூற்றெட்டு (1008 or 108) தேங்காய்கள் பக்தர்களால் இன்றும் பிரார்த்தனைக்காக உடைக்கப்பட்டு வருகின்றன. இதை விசேஷமாக நாட்டுக் கோட்டை செட்டிமார்கள் இன்றும் விசேஷமாகக் கையாண்டு வருகிறார்கள். இவரது வழிபாட்டால் சர்வ விக்ன விநாசம் ஏற்படுகிறது என்பது அனுபவ சித்தம். ஆவணி மாதத்தில் இவருக்கு "விநாயக சதுர்த்தி" உற்சவம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

## ஸ்ரீ கற்பக விநாயகர்

யஸ்ய, ஸ்மரணமாத்ரேண, ஸர்வாஸ்ஸித்யந்தி ஸித்தயா: |
தம், கணேசம், அஹம், வந்தே, கல்பகாக்யம் அஹர்நிசம் ||

இந்த மூர்த்தி மேற்கு கோபுரத்தின் தென்புறத்தில் மேற்கு முகமாக அமைந்துள்ளது கற்பக விருட்சம் போல் பக்தர்களுடைய எல்லா மனோபீஷ்டங்களையும் கொடுத்து அருள் செய்பவராதலால் கற்பக விநாயகர் எனப் பெயர் பெற்றார். இவர் எதிரில் உள்ள நந்தியும் ஒரு சமயம் துர்வாசமுனிவர் ஸ்ரீ நடராஜமூர்த்தியின் அர்த்தயாமத்திற்குப் பிறகு அகாலத்தில் "அன்னம்பால் அளிக்கும் தில்லைச்சிற்றம்பலம்" என்ற பழமொழியைச் சோதிக்க எண்ணி பல இடங்களில் பிக்ஷை கேட்க ஒருவரும் பதில் சொல்லாத காரணத்தால் "பழமொழி பொய்" என்று நினைக்கும் ஸமயத்தில் ஜகன்மாதாவான ஸ்ரீ சிவகாமசுந்தரி அன்னம் கொடுக்க "தேவருடைய நர்த்

தன தர்சனம் செய்யாமல் நாம் அன்னம் புசியோம் '' என்று சொல்ல தாயின் அனுமதியின் பேரில் முனிவரின் திருப்திக்காக நர்த்தனம் செய்த கணபதி இவர் இவருடைய ஸந்நிதியில் இருக்கும் நந்தி முன்பு வால்கலி என்ற அஸுரனுடைய விஜயத்திற்காக தேவேந்திரன் நந்தி ரூபமாக மறைந்து கொண்டு இவ்விடத்தில் தவம் செய்தான் என்பது பெரியோர்களின் கொள்கை.

## ஸ்ரீ பில்வ விருக்ஷம்

**மூலதோ ப்ரஹ்மரூபாய மத்யதோ விஷ்ணு ரூபிணே |**
**அக்ர தச் சிவரூபாய பில்வ விருக்ஷாய, தே, நம : ||**

ஸ்ரீ கற்பக விநாயகரின் எதிரில் உள்ள இந்த பில்வமரம் அனாதிகாலமாக இருக்கிறது. இது ஸ்ரீ நடராஜமூர்த்தியின் ஸ்வரூபமாகவே ஆகும். இதன் சமீபத்தில் ஸ்ரீமன் நடராஜர் சஹஸ்ர நாமங்களை பாராயணம் செய்வதால் எல்லாவித சித்திகளும் உண்டாகும். என்று ஸ்ரீ நடராஜ சஹஸ்ரநாமத்தின் உத்திர பீடிகையில் சொல்லப்பட்டுள்ளது இதில் இலைகள் அர்ச்சனைக்காக பறிக்கப்படுவதில்லை. தானே பழுத்து கீழே உதிர்ந்த இதன் இலைகளை சிவநாமா கூறி பக்தி விச்வாசத்துடன் சாப்பிடுகிறவர்களுக்கு சர்வ தோஷ வியாதி நிவர்த்தி ஏற்படுகிறது என்பது பெரியோர்களின் வாக்கு. இது ஸ்தல விருக்ஷமாக கருதப்பட்டுப் பாதுகாக்கப்படுகிறது.

## ஸ்ரீ நாகராஜர்

**நாகராஜ, நமஸ்துப்யம், தேவேச, ஹாரபூஷண |**
**விஷ்ணு தல்ப, நமஸ்தேஸ்து சர்பபீதிம் நிவாரய. ||**

நாகராஜர் கற்பக விருக்ஷத்தினடியில் அமைந்துள்ளார். இவர் வழிபாட்டால் புத்திரலாபமும், சர்பபீதி நிவாரணமும் ஏற்படும். பில்வ விருக்ஷத்தினடியில் புத்தரார்த்திகள் நாகப்ரதிஷ்டை செய்து வழிபடுகின்றனர்.

## ஸ்ரீ வீர ஸுப்ரமண்யர்

வள்ளீ ஸேனுயுதம், ஸ்கந்தம், தாரகாஸுர மாரகம் |

மஹாதேவஸுதம், வீர ஸுப்ரஹ்மண்யம், உபாஸ்மஹே ||

இந்த மூர்த்தி மேற்கு கோபுரத்தில் கிழக்கு முகமாக அமைந்துள்ளது. முத்துக்குமரஸ்வாமி என்கிற ஷண்முக மூர்த்தி வள்ளி, தேவசேனை என்கிற அம்பாளுடன் கூடியது. எதிரில் வாகனமான மயில் இருக்கிறது. ஐப்பசி மாதத்தில் ஸ்கந்தஷஷ்டி உத்ஸவம் சூர ஸம்ஹார உற்சவம் திருக் கல்யாண உற்சவமும் இங்கே வெகு விமரிசையாக வைதிக முறைப்படி நடந்து வருகிறது. கிருத்திகையிலும் சுக்லஷஷ்டி யிலும் விசேஷ ஆராதனைகள் நடைபெறுகின்றன.

வெகு காலத்திற்கு முன் முகம்மதியர்களுடைய ஆக்ரமிப் பினுல் இங்குள்ள விக்ரகங்களைப் பாதுகாப்பதற்காக தஞ்சை க்கு எடுத்துச் சென்று சில தினங்கள் அங்கு தங்கி குழப்பம் நீங்கிய பின் திரும்பி வருங்கால் வைத்யநாத க்ஷேத்திரத்தில் (வைத்தீஸ்வரன்கோவில்) அங்குள்ளவர்களின் வேண்டு கோளை ஏற்று அங்கேயே மிக அழகிய முத்துக்குமரஸ்வாமி யின் உத்ஸவ மூர்த்தி ஸ்தாபிக்கப்பட்டது. ஆகையால் தான் அங்கு இன்றும் அம்மூர்த்திக்கு ஓர் விசேஷ சிறப்பு காணப் படுகிறது. இந்த குமர கோஷ்டத்தில் (1) வீரபாகு (2) விரகேசரி (3) வீரமகேந்திரன் (4) வீரமகேச்வரன் (5) வீரபுரந்தரன் (6) வீரராக்ஷஸன் (7) வீரமார்த்தாண்டன் (8) வீராந்தகன் (9) வீரதீரன் என நவ வீரர்களின் மூர்த்தி கள் அமைந்துள்ளன.

முன்னெரு காலத்தில் தாரகாஸுரனுடைய ஆக்ரமிப்பை பொறுக்காத தேவர்களால் செய்யப்பட்ட அபராதத்தால் கோபமடைந்த பார்வதிதேவியின் அவசர நடையின்போது காலிலிருந்த சிலம்பிலிருந்து ஒன்பது ரத்னங்கள் நான்கு புறங்களிலும் சிதறின. அவைகளில் பார்வதியின் நிழல்கள்

பிரதிபலித்தன. அந்தந்த ரத்தினங்களுக்கு நிகரான ஒளி படைத்த உருவங்களை பரமசிவன் அழைக்க அவர்களும் எதிரில் வர அவர்களைக் கண்டு சிவன் மந்தஹாஸம் புரிய அதனாலேயே சூலுற்ற அந்த நவ நாரிமணிகளின் திருக்குமாரர்களே நவ வீரர்கள். இவர்கள் முருகக் கடவுளுக்கு தாரகாஸுர யுத்தத்தில் உதவி புரிந்தனர் என்பது ஸ்கந்த புராண வரலாறு. மேலும் ஸ்ரீ ஸுப்ரமண்ய பக்தரான அருணகிரி நாதர், அகஸ்த்யர், ஸரஸ்வதி, நாரதர், ஸிம்ஹவாகன விநாயகர், ஸூர்யன் ஆகிய அழகிய மூர்த்திகளும் அமைந்துள்ளன.

## ஸ்ரீ மீனாட்சி ஸுந்தரேச்வரர்

**ஸுந்தரம் மதுராநாதம் மீனாக்ஷீவல்லபம் சிவம் |**
**சிதம்பரக்ருதாவாஸம் ஸுந்தரேசம் அஹம்பஜே ||**
**ஜகதம்ப, கதம்பமூலவாஸே கமலாமோதமுகேந்துமந்த ஹாஸே**
**மதமந்திரசாருத்ருக் விலாஸே, மயிமீனாக்ஷிக்ருபாம் நிதேஹிதாஸே**

மாணிக்க வாசகருடைய பிரார்த்தனைக்காக அவருக்கு காக்ஷிக்கொடுத்த, அவரால் நீண்ட காலம் உபாஸிக்கப்பட்ட மீனாக்ஷீ ஸகிதரான சுந்தரேச்வரர் என்பதை இந்த ஸந்நிதானம் தெரிவிக்கின்றது.

## நூற்றுக்கால் மண்டபம்

இங்கு நவராத்திரி ஒன்பது தினங்களிலும் அம்பாளுக்கு விசேஷ உத்ஸவங்களும் ஊஞ்சல் உத்ஸவங்களும் நடைபெற்றன. அழகான சிறந்த மண்டபம்.

## ஆதி விநாயகர்

**சிவகங்கா பச்சிமஸ்த தேசேஸ் தம்பைக ஸம்யுதே |**
**மண்டபேஸம்ஸ்திதம் ஆதி விநாயகம் உபாஸ்மஹே ||**

நூற்றுக்கால் மண்டபத்திற்கு முன்புறத்திலுள்ள ஒருகால் உள்ள மண்டபத்தில் விளங்கும் விநாயகர். முதன்

முதலில் வியாக்ரபாதரால் காணப்பட்டதால் ஆதிவிநாயகர் எனப்பெயர் பெற்ருர். இவருடைய அருளாலேயே திருமூலர் என்றும் பெயருடைய மஹாயோகீச்வரர் அத்வைத ஸார மான " திருமந்திரம் " எனும் நூலை இயற்றினர். ஆதலால் ஸ்ரீமூல விநாயகர் என்றும் இவரை அழைப்பதுண்டு.

## ஸ்ரீ சிவகாமஸுந்தரீ

**ஸ்ரீமத் சித்புரவாஸினீம், பயஹராம், ஞானப்ரதாம், நிர்மலாம்**
**ஸ்ரீமத்ப்ரஹ்மநுதாம், சராசரமயீம், ஸர்வார்த்த ஸித்திப்ரதாம் |**
**ஸ்ரீமத்ஷண்முக விக்னராஜ ஜனனீம் ஸ்ரீமஜ்ஜகன் மோஹினீம்**
**கல்ஹாராம், ஜபஸ்ரக்சுகாம், கடிகராம், தேவீம் ஸதாபாவயே ||**

அம்பாளின் முன்னிலையில் தங்க த்வஜஸ்தம்பம் காணப் படுகிறது. ஐப்பசி மாதத்தில் பத்து தினங்கள் பூரஉத் ஸவம் விமரிசையாக நடத்தப்படுகிறது. ஒன்பதாவது நாளில் ரதோத்ஸவமும், பத்தாவது நாளில் " ருதுஸ்நோத் ஸவ " மென்கிற பட்டுப்பாவாடை யுத்ஸவமும் " பூரச்சொ ரங்கா " என்கிற முளைப்பயிர் முதலான திரவியங்களால் அம்பாளை வழிபடுகிற உத்ஸவமும் பதினோராவது நாளில் ஞானப்ரகாச குளத்தில் தபஸ் உத்ஸவமும், இரவில் மாலை மாற்றும் உத்ஸவமும், திருக்கல்யாண மஹோத்ஸவமும் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. புரட்டாசி மாதத்தில் நவராத்திரி உத்ஸவம், லக்ஷார்ச்சனை வழிபாடும் நடைபெறு கிறது. சிவகங்கா உருக்கொண்ட சிவனுக்கு இந்த அம்பாள் பத்தினியாக ஆகிறது. ஆகையாலேயே இதற்கு முன்புறத்தில் சிவகங்கையின் மேல்புறத்தில் இன்றும் ஜன்னல் காணப்படு கிறது. அதற்குமுன் நந்தியும் காணப்படுகிறது. ஜன்னலால் சதா அம்பாள் சிவனை பார்த்துக்கொண்டிருப்பதாகப் பெரி யோர்களின் நம்பிக்கை. சிவகங்கையில் ஜலத்தில் உள்ள லிங்கம் வெயில் காலத்தில் இப்பொழுதும் காணப்படுகிறது அம்பாளைச்சுற்றிலும் சுவர்களில் (1) ப்ராம்மீ (2) வைஷ்ணவி (3) ஐந்திரீ (4) கௌமாரீ (5) ரௌத்ரீ (6) வாராஹீ

(7) சாமுண்டீ என்னும் சப்தமாதாக்கள் காணப்படுகின்றனர். அழகிய ப்ராகாரமும் காணப்படுகிறது. ப்ராகாரத்தில் மண்டபத்திற்கு மேல்மண்டபமும், நடன மாதர்களின் சிற்பங்களும் சிறந்த முறையில் அமைக்கப்பட்டுள்ளன. இதன் வடக்கு ப்ராகார அங்கணத்தில் பல யோகிகள் அம்பிகையை ஆராதனம் செய்து விசேஷ கோரிக்கைகளை அடைந்தனர் என்று பெரியோர்களின் வாக்கு. இங்கு ஐப்பசிமீ துவஜாரோஹண உற்சவ தினங்களில் பூஜை ஹோமம் செய்வதற்கு தனித்து யாகசாலையும் காணப்படுகிறது உட்ப்ராகாரத்தில் "சிவானந்த கூபம்" என்று ஓர் அழகிய கிணறு உள்ளது. இத்தீர்த்தத்தினுலே அம்பிகைக்கு நான்கு கால அபிஷேகம் நடைபெறுகிறது. ஞான சக்தியான இச்சிவகாமசுந்தரி அம்பாள் ஸ்ரீ நடராஜமூர்த்தியினுடைய அருகில் மேற்புறத்தில் (வலது பக்கத்தில்) விளங்குகின்ற அருபமான, ரகஸ்ய ரூபமான, பரப்ரம்மத்தின் மஹிஷி (பத்தினி) என்றும் பெரியோர்கள் கூறுகின்றனர். ஆதலாலேயே சௌந்தர்ய லகரியில் ஆதிசங்கர பகவத்பாதாள் "பரப்ரஹ்மமஹிஷீ" என்று 97வது ஸ்துதியில் கூறியுள்ளார்கள். ஞான காமிகள் அம்பாளின் வழிபாட்டால் அத்வைதஞான லாபத்தை அடைவார்கள்.

## ஸ்ரீ சண்டிகேச்வரர்

சிவகாமீபதாம் போஜபரிஸ் புரித மானஸ |
தேவ்யாஸ்ஸேவா பலம் தேஹி சண்டிகேச நமோஸ்துதே ||

இவர் சன்னதியில் அம்பிகையின் சேவா பலப்ரார்த்தனம் செய்ய வேண்டும். இம்மூர்த்தியை நம்பால் கவனம் செலுத்த மும்முறை கைகொட்டுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர் பெரியோர்கள்.

## ஸ்ரீ சித்ரகுப்தர்

சித்ரகுப்தம் மஹாப்ராக்ஞம் ஸாக்ஷிணம் ஸர்வதேஹிநாம் |
நமாமிதர் மாதர் மக்ஞம் லேகினி பத்ரதாரிணம் ||

ப்ரம்மாவுடன் சேர்ந்து ப்ரகாசிக்கும் மூர்த்தி இது யமதர்மராஜரின் மந்திரி என்றும் ப்ராணிகளின் புண்ணிய பாப கணக்கர் என்றும், சாஸ்திரங்கள் கூறுகின்றன. சித்திரா பௌர்ணமியில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ ப்ருத்விதேவி

ஸமுத்ரவஸனேப் ருத்வி பர்வதஸ் தனமண்டிதே |
விஷ்ணு பத்னி நமஸ் துப்யம் பாதஸ்பர் சம்க்ஷமஸ்வமே ||

இத்தேவியின் வழிபாட்டால் சஸ்ய சமுருத்தி (பயிரின் செழிப்பு) ஏற்படுமென பெரியோர்களின் கொள்கை.

## ஸ்ரீ மஹிஷாசுரமர்த்தினி— (ஸ்ரீ துர்க்காதேவி)

மஹிஷக்னி ! மஹாதேவி ! திரிலோக பரமேச்வரி ! |
துக்க வியாதின் மமஹர துர்கே! தேவி! நமோஸ்துதே. ||

மஹிஷாசுரனைக் கொன்று அவன் தலைமேல் நிற்கும் மூர்த்தி. எட்டு கைகள் கொண்டது. செவ்வாய், வெள்ளி, பௌர்ணிமை, மாதப்பிறப்பு முதலிய விசேஷ தினங்களில் விசேஷ அபிஷேக ஆராதனங்கள் நடைபெறுகின்றன நவராத்திரியில் லக்ஷார்ச்சனையும் சிறப்பாக நடைபெறுகிறது. இம்மூர்த்தியை வழிபட்டால் சகல துக்க வியாதிகளும் நீங்குகின்றன. ஆதலாலேயே இம்மூர்த்தியின் சன்னிதானத்தில் துர்க்கா ஸூக்த, தேவிபாகவத, சப்தசதி பாராயணங்கள் அடிக்கடி நடைபெறுகின்றன. இம்மூர்த்தி வடக்குமுகமாக உள்ளது.

## ஸ்ரீ ஜெயமுருகர்

ஜயாநந்த பூமன் ! ஜயாபாரதாமன் ! ஜயாமோககீர்த்தே !
ஜயாநந்த மூர்த்தே |

ஜயாநந்தஸிந்தோ ! ஜயாசேஷபந்தோ ! ஜயத்வம்ஸதா !
முக்திதாநேச ஸூநோ |

வடக்கு கோபுரத்தின் உட்புறத்தின் மேற்புறத்தில் தென் முகமாக காணப்படும் மூர்த்தி சகல விஜயத்தையும், அளிக்கவல்லவர். "மு" என்பதால் முகுந்தரையும் "ரு" என்பதால் ருத்திரனையும், "க" என்பதால் ப்ரம்மத்தையும் தெரிவிக்கும், மும்மூர்த்திகளின் வடிவை தன் பெயரால் வெளியிட்டுக்கொண்டு ஜெயத்தை அளிக்கும் மூர்த்தி.

## ஸ்ரீ யமதர்மராஜர்

யமாய தர்ம ராஜாய ம்ருத்யவே சாந்தகாயச |
வைவஸ்வதாய காலாய சர்வபூத க்ஷயாயச ||

இவர் சூர்யனுடைய குமாரர். இம்மூர்த்தி இந்த க்ஷேத்திரத்தை தவிர எங்கும் காணப்படுவதில்லை. சித்ரா பௌர்ணமியில் இவரின் வழிபாட்டால் அகால ம்ருத்யு நீங்கும் என ஆன்றோர்களின் சொல்

## ஸ்ரீ காளஹஸ்தீச்வர்

தத்வாஸவமாம்ஸஞ்யனே சபரோபியஸ்மை தூர்ச்சிகார
மஹதிமபி காலபீதிம் |
வந்தேஸமஸ்த ஸுலபார்ச்சித பாதபத்மம் தம்காலஹஸ்தீச
மபார தயாம்பு ராசிம் |

பஞ்சபூத ஸ்தலங்களுள் ஒன்று வாயுக்ஷேத்திரம் ஸ்ரீ காளஹஸ்தி ஷடாதாரங்களுள் விசுத்தியாகும். திண்ணன் என்ற கண்ணப்பனுல் வழிப்பட்ட மூர்த்தி "சூடேச்வரர்" என்னும் பெயரால் பிரசித்திப் பெற்றவர். சிதம்பரத்தில் நடராஜ தாண்டவ தெரிசனத்திற்காக வந்த மூர்த்தி.

## ஸ்ரீ ஞானப்ரஸூனம்பிகா.

ஸ்ரீகாளஹஸ்தீச்வர தர்மபத்னிம் ஞானப்ரஸூநேதி
ப்ரஸித்த நாம்னிம் |
ஞானப்ரதாத்ரிம் பரமாம்பிகாம்தாம் ஞானேஷ்டஸித்யை
ப்ரணமாம்நித்யம்

ஸ்ரீ காளஹஸ்தீச்வரரின் தர்மபத்தினி ஞானமளிக்கும் வள்ளல். இவ்வம்பிகையின் வழிபாட்டால் சத்வித்யா லாபம் ஏற்படும். சிவராத்திரி தினத்தில் இவர்களுடைய விசேஷ வழிபட்டால் முக்தி கிடைக்கும்.

## ஸ்ரீ பாண்டியனயகம் ஸ்ரீ ஷண்முக சுப்ரமண்யம்.

ஷட்த்க்வரம் சிகிவாஹனம், த்ரிணயனம் சித்ராம்
பராலங்க்ருதம்
வஜ்ரம், சக்திம், அஸிம், த்ரிசூலம், அபயம், கேடம்,
தனுச்சக்ரகம் |
பாசம், குக்குடம், அங்குசம்ச, வரதம், தோர்பி, ததானம்,
ஸதா
வந்தேஸித்திதம் ஈச்வரம் சிவஸுதம், ஸ்கந்தம்,
ஸுராராதிதம் ||

## ஸ்ரீ வள்ளீ

ஸ்கந்தஸ்ய தக்ஷிணேபாகே, ஸ்திதாம் பங்கஜதாரிணீம் |
தெக்ஷலம் பகராம், ச்யாமாம், வள்ளீதேவீம் நமாம்யஹம் ||

## ஸ்ரீ தேவஸேன

குஹஸ்ய வாம பாகஸ்தாம் பீதாமுத்பல தாரிணீம் |
வாமே லம்பகராம் தேவஸேனும் நௌமி மஹேந்த்ர ஜாம் ||

இந்த ஷண்முகருடைய ஆலயம் பாண்டிய மன்னர் ஒருவரால் அமைக்கப்பட்டுள்ளதால் பாண்டியனயகம் என்று கூறப்படுகிறது. வள்ளி, தேவஸேனு என்கிற இரண்டு சக்திகளுடனும் மயில் வாஹனத்தில் கம்பீரமாயும், பிரஸந்நமாயும் வீற்றிருக்கும் இந்த ஷண்முக மூர்த்திக்கு பங்குனி மாதம் கார்த்திகை நக்ஷத்திரம் முதல் உத்தர நக்ஷத்திரம் இறுதியாக துவஜாரோஹண மஹோத்ஸவம் மிகவும் சிறப்பாக நடைபெறுகிறது. ஸுப்ரமண்யரின் இடது புறத்தில் இடது கையை தொங்கவிட்டுக்கொண்டும் வலது கையில்

நீலோத்பல மலரை வைத்துக்கொண்டும் இருக்கும் தேவி தேவசேனை வலதுபுறத்தில் வலது கையை தொங்கவிட்டுக் கொண்டும், இடதுகையில் தாமரைமலரை வைத்துக்கொண்டு இருக்கும் தேவி, வள்ளிதேவி ஆகும். தேவசேனையின் நிறம் பொன்னிறமாம் மஞ்சளாதலால் மஞ்சள் ஆடை அணிவிக்க வேண்டும். வ ள் ளி தே வி பசுமைநிறம் கொண்ட தால் பச்சை ஆடை அணிவிக்கவேண்டும் என்பது மறபு. தேவசேனை ஞானசக்தியின் உரு. வள்ளிதேவி இச்சாசக்தியின் உரு. வேல் கிரியாசக்தியின் உரு. சூரனைக்_கொன்று மயிலாக வும் (வாகனமாகவும்) குக்குடமாகவும் (சேவற்கொடியா கவும்) ஆக்கி நிக்கிரகரூப அநுக்ரகம் செய்தார் என்பது கந்த புராண வரலாறு. உற்சவ காலங்களில் பூஜை ஹோமம் நிகழ்த்த தணித்து ய ா க சா லை அமைந்துள்ளது. அர்த்த சந்திராகாரமான மண்டபச்சுவரில் கந்தபுராண செய்திகளை விளக்கும் அழகான சித்திரங்கள் வரையப்பட்டுள்ளன. கிருத்திகையிலும், சஷ்டியிலும் உறசவங்களும், ஆராதனை களும் விசேஷமாக ஷண்முகார்ச்சனைகளும் நடைபெறுகின் றன. வாயிலில் இருபுறத்திலும் வீரவாகுதேவர், வீரமார்த் தாண்டர் என்ற ரக்ஷகர்களும் காணப்படுகின்றனர். கீழ் மண்டபத்தில் த்வஜஸ்தம்பமும், ம யி லு ம், குமாராநந்த கூபமும் இருக்கின்றன. இந்த கூபஜலத்தாலேயே முருகக் கடவுளுக்கு அபிஷேகங்கள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ நவலிங்கங்கள்

மத்யஸ்தம் பாஸ்கரேசம் ச பச்சாத் அங்காரகப்ரபும் |
சுக்ரேசம் ஸோமநாதம் ச புதேசம் ச குருப்ரபும் ||
சனிசம் ராகுநாதம்ச கேத்வீசம் ச ஸதா நும: |
ஏதேஷாம் பூஜனே நைவ ப்ரஸீதேயுர் நவக்ரஹா: ||

சூர்யன் முதலிய ஒன்பது கிரகங்களும் ஆத்மார்த்தமாக பூஜை செய்த ஒ ன் ப து லிங்கங்களாகும் இந்த லிங்கங்களின் பெயர்களும் வழிபாடு செய்த கிரஹங்களின் பெயராலேயே

அமைந்துள்ளன. மத்தியில் இருப்பது (1) பாஸ்கரேச லிங்கமாகும் இது ஸ்வயம்பு சுற்றிலும் முறையே (2) அங்காரகேசர், (3) சுக்கரேசர், (4) ஸோமநாதர், (5) புதேசர், (6) குருப்ரபு, (7) சனீசர், (8) ராகுநாதர், (9) கேத்வீசர் எனப் பெயர் உள்ளவை. இவர்களின் வழிபாட்டால் நவக்ரஹ பிடாபரிகாரங்களும் நவக்ரஹங்களின் பிரீதியும் ஏற்படும். இத்தகைய ஒன்பது லிங்கங்கள் எங்கும் காணக் கிடைத்தற்கரியவை ஆகும்.

## ஸ்ரீ சிவகங்கை

விஷ்ணோ: சங்கதி காரிணி சிவ ஜடா ஜூடாட வீசாரிணீ |
ப்ராயச்சித்த நிவாரிணி ஜலகணை : புண்யௌக விஸ்தாரிணீ ||
பூபிருத்கந்தரதாரிணீ நிஜஜலே மஜ்ஜஜ் ஜனோத்தாரிணீ |
ராஜஞ : குஷ்ட நிவாரணீ விஜயதே கங்காசிவேத்யந்விதா

இந்த சிவஸ்வரூபமான சிவகங்கா தீர்த்தத்திற்கு வடக்கு, கிழக்கு, மேற்கு ஆகிய மூன்று அழகான மண்டபங்கள் சூரியன், சந்திரன், அக்னி என்ற மூன்று நேத்திரங்களாகும். மேற்குப் பக்கமாயுள்ள சந்த்ர நேத்ர மண்டபத்தில் அமாவாஸை முதலிய புண்ணிய காலங்களில் பரமேஸ்வரர் விருஷபாரூடராக வந்து தீர்த்தவாரி நடைபெறும். வடபுறக்கரையில் இருபுறங்களிலும் அமைந்துள்ள கைலாஸநாதர், ஸோமநாதர் என்ற இரண்டு சிவலிங்கமூர்த்திகளும், தீர்த்தத்தின் சிவஸ்வரூபத்தை நன்கு விளக்குகின்றன. இதில் விசேஷ தினங்களில் (அமாவாசை முதலியன) ஸ்நானம், தானம், சிரார்த்தம் முதலியன செய்வதாலும் பிராம்மண போஜனம் செய்வித்தலாலும் விசேஷ புண்ய பலன் கிடைக்கிறது என சிதம்பர மகாத்மியம் கூறுகிறது. கீழ்புறத்தில் மேல் மண்டபத்தில் உள்ள சிவலிங்கங்கள் கங்காதரர், கலாதரர் உள்ளே தீர்த்தத்தில் வடபுறத்தில் உள்ள லிங்கம் சிவரூபத்தை எண்பிக்கிறது. இந்த தீர்த்தத்தில் நீராடிய ஒரு பன்றி பொன் உருக்கொண்டது என்றும் ஸிம்ஹவர்ம சக்கரவர்த்தி இங்கு

நீராடி தன் குஷ்ட நோய் நீங்கி பொன் வடிவம் பெற்றான் என்றும் சிதம்பர புராணங்கள் கூறுகின்றன. மேற்கு பக்கத்தில் உள்ள கீழ் மண்டபத்தில் " தீர்த்தா லோகன கணபதி " என்பவர் இருக்கிறார். மழை காலத்தில் இத் தீர்த்தத்தில் நிறைவு ஏற்படும்பொழுது அத்தீர்த்தம் இம் மஹா கணபதியின் நாபியைத் தொட்டால் மழை நின்று விடும் என்பது பெரியோர்களின் கொள்கை. இச் சிவகங்கைக்கு பௌர்ணமி தினங்களில் ஸஹஸ்ரநாம அர்ச்சனைச் செய்து பலர் வழிபடுகின்றனர். இவ்வழிபாட்டால் தீவிர ஜ்வர உபாதைகள் நிவர்த்தி யாகின்றன என்பது பெரியோர்களின் கொள்கை. ஸ்ரீ நடராஜர் அபிஷேக தினங்களில் இதற்கும் தனியே அபிஷேக ஆராதனை நிகழ்த்தப்படுவது விசேஷமாகும். இதனுடைய மஹிமை சிதம்பர மஹாத்மியங்களிலும் ஸூதஸம்ஹிதை முதலிய புராணங்களிலும் காணக் கிடைக்கின்றது.

## ஸ்ரீ ஜம்புகேச்வரர்

ச்ருத்யந்தவேத்ய மஹஸே கிடி ஹம்ஸரூபகோவிந்த
பத்மபவம்ருக்ய பதாப்ஜ மூர்த்தே
பூபோகிதாண் ரமணிஸத்தார்ச்சிதாய ஸ்ரீ ஜம்புமூலநிலயாய
நமோபவாய

ஜலத்தின் உள்ளே மேற்புறத்தின் கடைசியில் இருக்கும் லிங்கம் ஜம்புகேச்வரர் திருவானைக்காவல் இவருக்குரிய இடம் அதுவே. அப்புக்ஷேத்திரம் ஜம்பு கேச்வரம் என்றும் சுவாதிஷ்டானம் என்றும் கூறப்படுகிறது. வெயில் காலங்களில் நீர் வற்றிய சமயத்தில் லிங்கம் ஸ்பஷ்டமாக காணக் கிடைக்கும். ஸ்ரீ நடராஜ தாண்டவ தெரிசனத்திற்காக சிதம்பரம் வந்து நிலையாக தங்கிவிட்டார் என்பது ஆன்றோர்களின் கருத்து.

## ஆயிரக்கால் மண்டபம் (ராஜசபை)

இது ஆயிரம் கல்தூண்களால் அமைக்கப்பட்ட மிக அழகிய மண்டபம். இது ஐந்து சபைகளுள் ஒன்ருகும் ப்ராணமயகோசத்தில் அமைந்துள்ளது. ஸ்ரீ நடராஜர்மூர்த்திக்கும் ஸ்ரீ சிவகாமஸுந்தரி அம்பாளுக்கும்ஆனிமார்கழி மாதங்களில் நடைபெறும் மஹோத்ஸவ மஹாபிஷேகம் இங்கு நடைபெறுகிறது. நடராஜர் தங்கும் சபையானதால் ராஜ சபை என்று பெயர் பெற்றது. இங்குதான் **தசரதசக்ரவர்த்தி** புத்தரகாமேஷ்டியாகம் செய்தார் என சிதம்பர புராணம் கூறுகிறது. மேலும் இங்கே **பதஞ்சலிபகவான்** தனது மஹாபாஷ்யத்தை ஆயிரம் மாணவர்களுக்கு தனது ஆயிரமுகத்தால் உபதேசம் செய்து அரங்கேற்றினர் என பதஞ்சலி சரிதகாவியம் கூறும். மேலும் **கவிச்சக்கரவர்த்தி கம்பர்** தனது ராமாயணத்தை இங்கே அரங்கேற்றினர். **சேக்கிழார்** பெரிய புராணத்தையும் **திருமூலர்** திருமந்திரத்தையும், **மணிவாசகர்** திருவாசகத்தையும், **உமாபதி சிவாச்சாரியார்** தென்மொழியில் கோயிற் புராணத்தையும், வடமொழியில் குஞ்சிதாங்கிரிஸ்தவத்தையும், **ராமலிங்க அடிகள்** திருவருட்பாவையும், **கோபாலகிருஷ்ண பாரதியார்** நந்தனர் சரித்திரத்தையும் இங்கையே அரங்கேற்றி மிகுந்த சிறப்பை அடைந்தது உலகறிந்த விஷயம். அதைக் கருதியே இன்றளவும் பல புலவர்கள் தன் தன் திறமைகளை முதன் முதலாக ஸ்ரீ நடராஜர் அர்ப்பணமாக இங்கே அரங்கேற்றுவதை காணலாம்.

## ஸ்ரீ புருஷம்ருகம்

சிவபக்தம் புருஷம் ருகம் பக்தாக்ரேஸர முத்தமம் |
சிவஸேவா பலப்ராப்த்யை ஆதா வந்தே பஜேன் வஹம் ||

இந்த புருஷம்ருகம் என்கிற சிவபக்தரை ஆலயத்திற்குள் ப்ரவேசிக்கும் பொழுதும் வெளியே வரும்பொழுதும் தரிசிக்க

வேண்டும் என்பது இந்த பக்தருடைய வேண்டுகோள். இந்த பக்த தரிசனத்திஞலேயே மூர்த்தி தரிசன பலன் பூரணமாக கிடைக்கும் என்பது பெரியோர்களின் கொள்கை. இது மஞேமய கோசப்ரகாரமாகும். இம்மூர்த்தி கிழக்கு, புகுமுகு வாசலில் வடபுற மேடையில் மேலே அமைந்துள்ளது. ஆதலால் இம்மூர்த்தியை வழிபட்டு உள்ளே செல்வோம் எனக் கலாவதிக்கு மணிபத்ரன் கூறுகிருர். இப்புகுமுகு வாசலில் 21 படிகள் இருக்கின்றன. இது "ஏக விம்சதி துக்கத்வம்ஸோ மோக்ஷ" என்னும் சாஸ்திர கருத்தினை விளக்கவே இவ்வாறு அமைந்துள்ளது. இதைத் தாண்டி உள்ளேசென்று ஆடல் அரசனை வணங்கி முக்திப்பேரின்பம் அடையும் வகையை அறிவுறுத்துகிறது.

## ஸ்ரீ மாம்பழ விநாயகர்

" விஞயகம் சாம்ப்ரபல ஹஸ்தம் விக்ன விஞசகம் |
பக்தேப்யோபலதாதாரம் நமாமித்விரதானனம் ||

இவரை தெரிசனம் செய்து கொண்டுதான் ஸ்ரீமந் நடராஜர் தெரிசனத்திற்கு பக்தர்கள் உள்ளே செல்ல வேண்டும். ஒரு சமயம் பார்வதி பரமேச்வரர்கள் தன் குமாரர்களான விஞயகரையும், முருகனையும் நோக்கி பூமண்டலத்தை பிரதக்ஷிணம் செய்து முதன்முதலில் வருபவர்களுக்கு இச்சிறந்த மாங்கனி அளிக்கப்படும் என்று பந்தயம் கூறிய போது முருகன் மயில் வாகனம் ஏறி உலகத்தை சுற்றி வருவதற்குள் விஞயகர் ப்ரபஞ்ச ஸ்வரூபிகளான பார்வதி, பரமேச்வரரையே வலஞ்செய்து மாம்பழத்தை பெற்றுவிட்டபடியால் "மாம்பழ விஞயகர்" எனப் பெயர் ஏற்பட்டது என புராண வரலாறு. பழத்தை கையில் வைத்துக் கொண்டிருக்கும் இவரை வணங்கிச் செல்லும் பக்தர்களுக்கும், ஸ்ரீ நடராஜ தெரிசனமும் சபலமாகும் என்பது உறுதி. இவருக்கு சுக்ல சதுர்த்தியிலும், சங்கடஹர சதுர்த்தியிலும், விசேஷ பூஜைகள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ அன்னபூர்ணு

அன்னபூர்ணே ! விசாலாக்ஷி விச்வநாத மனோஹரி ! |
சிதம்பரக்ருதாவாஸே ! ஸம்பூர்ணான்னம் ப்ரயச்சமே ||

தென் பிராகாரத்தில் மடைப்பள்ளிக்கு முன்புறத்தில் உள்ள மூர்த்தி. இதன் தரிசனத்தாலும், வழிபாட்டாலும் அன்னசமிருத்தி ஏற்படும். இங்குதான் ஸ்ரீ நடராஜரின் மஹா நைவேத்தியங்கள் தயாராகின்றன.

## ஸ்ரீ காலஸம்ஹாரமூர்த்தி

ம்ருத்யும் ஜய மஹாருத்ர த்ராஹிமாம் சரணாகதம் |
ஜன்ம ம்ருத்யு ஜராரோகை : பீடிதம் கர்ம பந்தனை : ||

திருக்கடையூரில் மார்க்கண்டேயரின் அநுக்ரஹத்தின் பொருட்டு யம நிக்ரஹத்துக்காக லிங்கத்திலிருந்து தோன்றியவர். மிக அழகான மூர்த்தி. இம்மூர்த்தியில் ஓர் விசேஷம் வலது காலால் யமனை உதைப்பது, அதற்கு இரு காரணங்கள். ஒன்று :— இடதுகால் அம்பாளின் அம்சமாகையால் அதனுல் உதைப்பது தகுதியன்று என்று வலதுகாலால் உதைத்தார். இரண்டாவது :— ஸ்ரீ நடராஜமூர்த்தியினுடைய இடது காலானது அநுக்ரஹ பாதமாகையால் அதனுல் உதைப்பது தகுதியன்று என்று கருதி அபஸ்மார நிக்ரஹ வலதுபாதத்தால் உதைத்து நிக்ரஹாநுக்ரஹம் செய்தார் என்பதாகும். இவரை வழிபடின் ம்ருத்யு பயமும், ரோக பயமும் நீங்கும். கார்த்திகை சோமவாரங்களில், விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ சோமாஸ்கந்தமூர்த்தி

ஸோமாஸ்கந்தம் ஸுரபதிம் ஸுந்தரம் ஸோம சேகரம் |
ஸோமஸூர்யாக்நி நேத்ராணி ததம் ப்ரணமாம்யஹம் ||

உமையுடனும் ஸ்கந்தருடனும் விளங்குவதால் ஸோமாஸ்கந்தர் என இம்மூர்த்திக்கு பெயர் ஏற்பட்டது.

இவருடைய வழிபாட்டால் அழகான புத்ரோத்பத்தி ஏற்படும் என்பது நம்பிக்கை. இதனடியில் பஞ்சபாண்டவர்கள் உள்ளனர். அவர்கள் இங்கு ராஜசூயம் செய்தனர் என்றும் ஸ்ரீ நடராஜர் அருளால் சாம்ராஜ்ய பட்டாபிஷேகம் பெற்றனர் என்றும் வரலாறு. இருபுறங்களிலும் வ்யாசரும் வால்மீகியும் காணப்படுகின்றனர். ஸ்ரீ நடேசர் அருளால் வியாசர் புராணங்களையும் ப்ரஹ்மஸூத்ரங்களையும் வால்மீகி ராமாயணத்தையும் இயற்றினர் என்பது விருத்தர்களின் பரம்பரை வாக்கு.

## ஸ்ரீ சரபேச்வரர்

யோபூத் ஸஹஸ்ராம்சு சதப்ரகாச ; ந்ருஸிம்ஹஸம் க்ஷோப
ஸமாத்தருப : |
ஸபக்ஷிஸிம்ஹாக்ருதி : அஷ்டபாத : பாயாத் அபாயாத்
சரபேச் வரோந : ||

இது மனோமய கோசப்ரகாரத்தில் உள்ள ஐந்து சபைகளுள் ஒன்றான நிருத்தசபை. இதில் தெற்குபுறத்தில் விளங்கும் மூர்த்தி சரபேச்வரமூர்த்தி ஆகும். இரண்ய கசிபு என்ற அசுரனைக் கொன்று ப்ரஹ்லாதனுக்கு அருள் புரிந்த ஸ்ரீ நரசிம்மமூர்த்தியின் கர்வத்தை அடக்கிய சரபம் என்ற எட்டுக்கால்களும், சிறகுகளும் கொண்ட ஓர் உக்கிரமூர்த்தி விசேஷமாகும். இந்த மூர்த்தியின் பெருமை சரப உபநிஷத்தில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது. ஞாயிற்றுக்கிழமைகளில் விசேஷ ஆராதனைகள் நடைபெறுகின்றன. இதனுடைய ஆராதனத்தாலும் சந்தனக்கவசம் அணிவிப்பதாலும் மந்த்ர ஜப பாராயணங்களாலும் துஷ்டக்ரஹ ஜ்வராதி, பாதா நிவர்த்தியானது ஏற்படுகிறது என்பது ப்ரத்யக்ஷசித்தம்.

## ஸ்ரீ ஊர்த்துவ தாண்டவமூர்த்தி

வாணீவல்லப வந்த்ய வைப வயுதம் வந்தாரு சிந்தாமணிம்
வாதாசாதிப பூஷணம் வரக்ருபா வாராம்- நிதிம் ஸ்ரீகரம் ||
ஊர்த்வானந்த விசேஷ தாண்டவகரம் ஸ்ரீ ந்ருத்தராஜேச்வரம் |
வாமாங்காப்தவராங்கணம் சிவம் அஹம் ஸ்ரீ மங் நடேசம் பஜே ||

ஸ்ரீமங் நடராஜர்மூர்த்தி நவதாண்டவங்களில் ஒன்றுன ஊர்த்துவ தாண்டவத்தை வலது காலை தூக்கிச் செய்து ஸ்ரீ தில்லைக்காளியை ஜெயித்ததாக புராணம் கூறும். இந்த ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியின் உத்திரவின் பேரில் தில்லைக்காளி வடக்கு கோபுரத்திலிருந்து சிறிது தூரத்தில் இருந்துகொண்டு இந்த க்ஷேத்திரத்தை சம்ரக்ஷித்துக்கொண்டு வருகிருள் ஸ்ரீமங்நடராஜ தரிசனத்துடன் ஸ்ரீ தில்லைக்காளியம் பாளையும் தர்சிக்க வேண்டியது மிக அவசியமானது ஆகும்.

## ஸ்வர்ண த்வஜஸ்தம்பம்

ஸ்ரீமங் நடராஜமூர்த்தியின் ஆனிமீ மார்கழிமீ மஹோத்ஸவங்களில் இங்கு த்வஜாரோஹணம் நடைபெறுகிறது ஸ்ரீ நடராஜரின் ஆறுகால பூஜா நேரங்களில் தேவதைகள் ஆகாயத்திலிருந்து கொண்டு ஸ்ரீ மங் நடராஜரை வழிபட்டுக் கொண்டு துவஸ்தம்பத்தின் மேல் உள்ள மணிகளை அடிக்கின்றனர் என்று புராண வரலாறு. இதற்கு முன்புறம் மஹா பலிபீடம் ஒன்று இருக்கிறது. இந்த பலிமேடையில் நிவேதனம் செய்யப்படும் அன்னத்தை புஜிக்கும் பெண்மணிகள் சூலுறுகின்றனர் என்பது சான்றேர்களின் கொள்கை.

## ஸ்ரீ மஹாலக்ஷிமி

பூயாத் பூயோ த்வி பத்மா பயவர தகரா தப்த கார்த்தஸ்வராபா |
சுப்ராப்ராபேப, யுக்ம, த்வய, கர, த்ருத, கும்பாத்பி, ராஸிச்யமானா ||

ரத்னௌகா, பத்தமௌளிர், விமல, தர, துகூலார்த்தவா,
லேபனுட்யா |
பத்மாக்ஷி, பத்ம நாபோரஸி, க்ருத வஸதி :, பத்மகாச்ரீ :
ச்ரீயேந : ||

மஹாலக்ஷிமிக்கு புண்டரீகவல்லி என்றும் ஒரு திருநாமம் உண்டு. இங்கு நவராத்திரியில் விசேஷ உற்சவம் நடைபெறுகிறது. பவித்ரோத்ஸவ ஹோமங்களும் டோலோத்ஸவமும் இங்குதான் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ யோகநரசிம்மர்

ப்ரஹ்லாதாஹ்லாதகம், யோகநரஸிம்ஹம் நதார்த்ததம் |
சங்கராசார்ய ஸுகதம உத்தராபிமுகம் பஜே ||

ஸ்ரீ மஹாலக்ஷிமி ஸன்னிதானத்திற்கு தென்புற மண்டபத்தில் வடக்கு முகமாக வீற்றிருக்கும் மூர்த்தி வலது பக்கத்தில் ஸ்ரீ ராமானுஜரும் இடதுபுறத்தில் கூரத்தாழ்வாரும் உள்ளனர், ப்ரஹலாதனின் அனுக்ரஹத்திற்காக ஸ்ரீ விஷ்ணு மனித சிங்க உருக்கொண்டு ஹிரண்யகசிபுவை கொன்று கோப மடங்காமல் இருக்கும் தருவாயில் சரபமூர்த்தியால் சாந்தப்பட்டு யோகநிலையில் அமர்ந்து பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறுர். ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாளுக்கு நெருப்பினல் ஏற்பட்ட பாதையை நீக்கி சுகமடைவித்தார் என்பது புராண வரலாறு.

## ஸ்ரீ தண்டாயுதபாணி

மயூர பிஞ்சாவலி மேக பங்த்தே : மத்யே சஹஸ்ராம்சும் இவ
உதயந்தம் |
ரிபௌச பாணௌச சதாததந்தம் தண்டம் பஜே பாலகுஹம்
ஹ்ருதப்ஜே ||

இந்த மூர்த்தி ஸ்தம்பத்தில் அமைந்திருக்கிறுர். கௌபிணதாரியாக மயிலுடன் கையில் தண்டம் தரித்து பால

உருவில் அழகாக விளங்குகிறுர். பாலமுருகன் என்றும் வழங்கப்படுகிறுர். முன்னெரு சமயம் பழநி க்ஷேத்திரத்திற்கு காவடி பிரார்த்தனையாக செல்லும் பக்தர்கள் கொள்ளிடம் வெள்ளத்தால் தைப்புஷ்ய தினத்தில் போக முடியாமல் கவலை கொண்டிருக்கும் பொழுது "இந்த ஸ்தம்பத்தில் இருக்கின்ற நமக்கே பிரார்த்தனையை செலுத்துங்கள்" என்று அநேக பக்தர்களுக்கு ஒரே காலத்தில் ஸ்வப்னம் உண்டாகி இங்கேயே பிரார்த்தனையை செலுத்தி சம்பூர்ண பலனை அடைந்தனர் என்று முதியோர்கள் கூறுகின்றனர். கிருத்திகை, சஷ்டி முதலிய விசேஷ புண்ணிய காலங்களில் விசேஷ ஆராதனைகள் நடைபெறுகின்றன. காவடிப் பிரார்த்தனைகளும் அடிக்கடி நடைபெறுகின்றன. ஒரு சமயம் ஒரு தெய்வ நிந்தகன் ஸ்தம்பத்தில் இருக்கும் இவ்வுருவை இகழ்ந்து கொண்டு காலால் உதைக்க கால் ஸ்தம்பத்திலேயே ஒட்டிக் கொள்ள பிறகு காலை வெட்டியே விடுவிக்க நேர்ந்தது. பிறகு காலின்றியே வாழ்நாள் முழுதும் கழியை ஊன்றிக்கொண்டே தண்டபாணிக்கு விசேஷ பணிவிடைகள் செய்துகொண்டு காலங்கழித்ததாக பரம்பரைச் செய்தி. ஆதலால் இம்மூர்த்தி கண்கண்ட தெய்வமாகும்.

## ஸ்ரீ ஆகாச விநாயகர்

(திருமறை காட்டிய விநாயகர்)

ஆகாசஸ்தம் மஹாதேவ ஸூனும் சந்த்ரார்த்தசேகரம் |
மகாகணபதிம் வந்தே மஹாபாதக சாந்தயே ||

தென் புகு முகுவாசலுக்கு நேர் எதிராக மேல் மண்டபத்தில் இருப்பதால் ஆகாய விநாயகர் என்று வழங்கப்படுகிறுர். சோழ நாட்டு அரசன் ஒருவன் சிதம்பரத்தில் தேவார நூல்கள் இருப்பதாக தெரிந்து கொண்டு இவ்விடம் ஆலயத்தில் தேடும் போது இவ்விநாயகர் அவ்வரசனுக்கு நால்வர் சன்னிதானத்தை (அப்பர், ஸம்பந்தர், மாணிக்கவாசகர், சுந்தரர்) சுட்டிக்காட்டி இங்கே தேவார நூல்கள் இருப்ப

தாக சொல்லியபடியால் இவருக்கு திருமுறை காட்டிய விநாயகர் எனப் பெயர் ஏற்பட்டது என அறிஞர்கள் கூறுகின்றனர்.

## ஸ்ரீ மாயூர நாதர்.

மயூர ரூப தாரிண்யா பார்வத்யா பூஜிதம் சிவம் |
மயூரநாதம் ஈசானம் ப்ரணமாமி புனப்புன : ||

இவர் ஆகாச விநாயகருக்கு கீழே விளங்கும் மூர்த்தி. பார்வதி மயில் வடிவம் எடுத்து இவரை வழிபட்டதாக மாயூர புராணம் கூறும். இவரது இருபுறங்களிலும் இருக்கும் ஸுப்பிரமணியரும், விநாயகரும், மயூரேசர், மயூரகணபதி எனப் பெயர் பெற்றுள்ளார்கள்.

## நால்வர் சன்னிதானம்.

அப்பர் என்கிற திருநாவுக்கரசர், கையால் உழவாரம் ஏந்தியும், திருஞானசம்பந்தர், பகவானளித்த பொன்தாளம் ஏந்தியும், மணிவாசகர், கைகூப்பியும், ஸுந்தரமூர்த்தி அழகான இளம் வயதுடனும் காட்சி அளிக்கின்றனர், இவர்களது வரலாறு பெரியபுராணம், உபமன்யு, அகஸ்த்ய ஹரதத்த பக்த விலாஸத்திலும், மணிவாசக புராணத்திலும் விரிவாக கூறப்பட்டுள்ளது.

இந்த ஸன்னிதானத்தில் சோழராஜன் இங்குள்ள திருமறை நூல்களை எடுப்பதற்காக தில்லைவாழ் அந்தணர்களை பிரார்த்திக்க அவ்வந்தணர்கள் அவர் வேண்டுகோளுக்கு இணங்க திருமறைகளை எடுத்துக்கொடுத்து இந்த நான்கு பக்த சிகாமணிகளையும் ஸ்தாபித்து நித்திய வழிபாடும் நடத்த ஏற்பாடு செய்தார்கள். அவ்வாறே இன்றளவும் நடைபெறுவதைக்காணலாம்.

## வாகனமண்டபம்.

இதில் உற்சவமூர்த்திகளுக்கு ஏற்பட்டுள்ள வாஹனங்களும், மஞ்சங்களும், பல்லக்குகளும் பாதுகாக்கப்படுகின்றன.

## ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி

ஸ்படிக ரஜத வர்ணம் மௌக்திகிம் அக்ஷமாலாம்
அனல கலச வித்யாம் ஞான முத்ராம் கராப்ஜை : |
ததம் உரககக்ஷம் சந்திரசூடம் த்ரிணேத்ரம்
வடதரு ஸுகவாஸம் தக்ஷிணாமூர்த்திம் ஈடே ||

இவர் பெருமையை தக்ஷிணாமூர்த்தி உபநிஷத்தில் காணலாம். இந்தமூர்த்தியின் சன்னதியில் பஞ்சாக்ஷரம் முதலிய மஹாமந்திரங்களை ஜபம் செய்வதால் நூறு மடங்கு பலன் கிடைப்பதாக பெரியோர்கள் கூறுகின்றனர். இவருக்கருகில் கிழே மேற்புறத்தில் சனர், சனந்தனர், கிழ்புறத்தில், சனாதனர், சனத்குமாரர் என்னும் நான்கு சிஷ்யர்களின் விக்கிரஹங்கள் உள்ளன. வியாழக்கிழமைகளில் விசேஷ வழிபாடுகள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ பல்லிகேசர்.

பல்லீசாய நமஸ்துப்யம் பரமேசாய தேநம : |
பல்லீ பதனஜம் தோஷம் நிவாராயசுகம் குரு. ||

சரீரத்தின் உறுப்புகளில் பல்லி விழுவதால் ஏற்படும் சில அரிஷ்டங்களை நிவர்த்தி செய்யும் மூர்த்தி. இவரது வழிபாட்டால் தோஷங்கள் நீங்கி சுகம் பெறலாம்.

## ஸ்ரீ வல்லபா கணபதி

அதஸ்தாத் மானுஷா காரம் புரஸ்தாத் குஞ்சராகிருதிம் |
வாமே வல்லபயா யுக்தம் மஹாகணபதிம் பஜே ||

தாரகாசுரனுடைய யுத்தத்தில் இந்த வல்லபையினுடைய யோனி வழியாக ஏராளமான சைன்யங்கள் வந்து

யுத்தம் செய்து கொண்டிருக்கும் பொழுது சண்டை முடிவு பெருததால் ஸ்ரீ ஸ்கந்தர் மிகக் கவலையுடன் விநாயகரை பிரார்த்திக்க இந்த வல்லபையை மடியில் அமர்த்திக் கொண்டு தனது துதிக்கையால் யோனி வழியை மறைத்து யுத்தம் முடியும்படி அனுக்ரஹித்தார் என்பது இதிகாசம். இவரது வழிபாட்டால் சத்துரு பயம் நீங்கும் என்பது ஆன்ருேர்களின் கொள்கை.

## ஸ்ரீ ஜகன் மோஹன கணபதி

கிரிஜாஹஸ்தலிகித சித்ரபித்திவி பூஷணம் |
ஜகதாம் மோஹகம் தேவம் வந்தே கணபதிம் முதா ||

தனது அழகால் உலகை வசீகரிக்கும் விநாயகர். இவரை ஆராதனை செய்து இவர் அருளால் உலகை வசமாக்கலாம் என்று பெரியோர்கள் கூறுகின்றனர்.

## ஸ்ரீ நந்திகேச்வரர்

நந்திகேச மகாபாக சிவத்யான பராயன |
உமாசங்கர சேவார்த்தம் அனுக்ஞாம் தாதும் அர்கஸிஞாம் |

ஸ்ரீ மூலநாதருடைய எதிரில் உள்ள இந்த நந்தியின் வால்புறத்தை தொட்டு சிவசேவைக்காக அநுக்ஞை பெற வேண்டும். ஸ்ரீ நந்திகேச்வரரின் கொம்புகளின் இடைவழியாக சிவனை தெரிசிக்க வேண்டும் என்பது பெரியோர்களின் வழக்கம்.

## ஸ்ரீ மூலநாதர்

ஜடாதட ஜன்னு குமாரி காயா :
தாடங்கிதா யஸ்யதரங்க ஸங்கை : |
தஸ்மை, மஹிம்னும், அவஸான ஸீம்னே
ஸ்ரீ மூலநாதாய நமச்சிவாய ||

இச்சிவலிங்கம் அனாதி காலமாக இருந்து வருகிறது. ஸ்வயம்பு லிங்கம் பாதாள லோகத்தில் உள்ள ஒரு பர்வதத்தின் சிரோபாகம் என்று சிதம்பர புராணம் கூறுகிறது. நீண்ட காலமாக த்ரிசஹஸ்ர முனீஸ்வரர்கள் இந்த மூர்த்தியை வேத விதிப்படி வழிபட்டு வருகின்றனர். இவரது அருளால் வியாக்ரபாதருடைய குமாரரான உபமன்யு முனிவர் திருப்பாற்கடலைப் பெற்றார். இவரது வழிபாட்டின் வலிமையாலேயே பதஞ்சலி வியாக்ரபாத முனிவர்கள் தைமாதத்தில் குரு புஷ்யதினத்தில் ஸ்ரீ மந் நடராஜ மூர்த்தியின் ஆனந்த தாண்டவ தர்சனம் செய்தார்கள். இவருக்கு இருபுறத்திலும் மஹா மண்டபத்தில் வியாக்ரபாதரும், பதஞ்சலியும், விநாயகரும், சுப்பிரமணியரும் விளங்குகின்றனர். நான்கு கால பூஜைகள் நடைபெறுகின்றன. அடிக்கடி ருத்ராபிஷேகங்களும் நடைபெறுகின்றன. ஒவ்வொரு மாத பௌர்ணமியிலும் விசேஷ த்ரவியங்களால் ஆராதனம் செய்வது விசேஷமென சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவ்வாறே சிலரும் செய்து வழிபட்டு வருகின்றனர். சித்திரையில் மருக்கொழுந்து, வைகாசியில் கந்தம், ஆனியில் முக்கனி, ஆடியில் பால், ஆவணியில் சர்க்கரை, புரட்டாசியில் அப்பம், ஐப்பசியில் அன்னம், கார்த்திகையில் தீபம், மார்கழியில் நெய், தையில் கருப்பஞ்சாறு, மாசியில் நெய்யில் நனைந்த கம்பளம், பங்குனியில் தயிர் இவ்வாறாக வழிபட்டால் பகவானுக்கு விசேஷத் திருப்தி ஏற்படுகிறது என்பது சாஸ்திரங்களின் கொள்கை. திருவாதிரையிலும், பிரதோஷத்திலும், சோம வாரத்திலும், மூல நக்ஷத்திரத்திலும், சிவராத்திரியிலும் விசேஷ பூஜை நடத்துவது விசேஷமாகும்.

## ஸ்ரீ உமாபார்வதி

நமாமி மேனா தனயாம் அமேயாம்
உமாம்பிகாம் ஆனந்த நந்த தாத்ரீம் |

விசால நேத்ராம் ப்ரணமாமி கௌரீம்
சதுர்புஜாம் தக்ஷிண மூலநாதாம் ||

தெற்குமுகமாக இருக்கும் உமாம்பிகை நான்கு புஜங்களுடன் பக்தர்களுக்கு அருள்பாலித்துக்கொண்டு இருக்கும் மூர்த்தி.

## ஸ்ரீ விச்வநாதர்

வாசாம் அகோசரம் அனேக குணச்ஸ்வரூபம் கௌரீ நிரந்தர
விபூஷித வாமபாகம் |
வாகீச விஷ்ணு சுரசேவித பாதபீடம் வந்தே சிதம்பரபதிம்
சிவவிச்வநாதம் ||

இவர் காசியில் விளங்கும் மூர்த்தி. ஸ்ரீ நடராஜருடைய ஆனந்ததாண்டவ தெரிசனத்திற்காக சிதம்ரம் வந்தவர்.

## ஸ்ரீ ஏகாம்பரேச்வரர்

காமாக்ஷ்யா கவிதா தாத்ரியா, காஞ்ச்யாம் ஆம்தரோ: அத: |
பூஜதம் சித்புரே வந்தே, ஏகாம்பர மஹேச்வரம் ||

பஞ்சபூத ஸ்தலங்களுள் பிருதிவீ ஸ்தானமான ஸ்ரீ காஞ்சிபுரத்தில் விளங்கும் ஏகாம்பரேச்வரர் ஸ்ரீ நடேசரின் ஆனந்த நர்த்தனத்திற்காக வந்து தங்கியவர், இங்கு பக்தர்களுக்கு காக்ஷி கொடுத்துக்கொண்டு விளங்கி வருகின்றார்.

## ஸ்ரீ கற்பகவிருக்ஷம்

கல்ப விருக்ஷ நமஸ்துப்யம், தேவவ்ருக்ஷ நமோஸ்துதே |
யதிய மூல நிகடே வாஞ்சிதம் ஸுலபம் பவேத் ||

ஸ்வர்கலோகத்தில் வேண்டியதை வழங்கிவரும் இத் தேவதரு இங்கு காக்ஷி அளிக்கிறது. இதனை வழிபடின் வேண்டிய விருப்பங்கள் நிறைவேறுகின்றன என சான்றோர்

களின் கொள்கை. அடிக்கடி வழிபாடுகள் நடைபெறுகின்றன. இதனை அக்ஷயவடம் என்றும் கூறுவர். இதன் ஆராதனத்தில் பித்ருதிருப்தி ஏற்படுகின்றது என்பது துணிபு.

## ஸ்ரீ வைத்தியநாதர்

அனவதி தயாபியூஷாம்போதி ஸாரமயம் நிஜஸ்மரண–
ஸமயாலீடா சேஷாமய க்ரஹபிடனம் |
நிடிலநயனஜ்யோதி : ஸ்வாஹாக்ருதா ஸமஸாயகம்
ஜயதுமஹிதம் தேஜ : ஸ்ரீ வைத்யநாத ஸமாஹ்வயம் ||

வைத்தீச்வரன் கோயிலில் விளங்கும் இம்மூர்த்தி இங்கு தாண்டவ தர்சனத்திற்காக வந்து இங்கேயே நிலையாக தங்கி விட்டார். இவரது வழிபாட்டால் பிணிகள் நீங்கி ஸுகமடையலாம். க்ருத்திகையிலும், மங்கள வாரத்திலும் அபிஷேகம் பூஜைகள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ தைவநாயகி

நமாமி பவஸந்தாப நிர்வாபன ஸுதாநதீம் |
ஸ்ரீ தைவநாயகீம் தேவீம் காந்தாம் சந்த்ரார்த்தசேகராம் ||

ஸ்ரீ வைத்யநாதரின் தர்ம பத்னி தையல்நாயகி என்றும் கூறுவர்.

## ஸ்ரீ த்வாரபாலகர்

ஸ்ரீ மூலநாதர் வடப்ராகாரத்தில் முதலில் உள்ள ஜயன் என்று பெயருடைய சிவவாசல் காப்பவர்.

## ஸ்ரீ விநாயகர்

மஹாகணபதிம் வந்தே மஹாவிக்ன நிவாரணம் |
மஹாதேவஸுதம் தேவம் மஹாசைவஸுதா ஸுதம் |

உமையின் மைந்தர், மஹேசரின் மூத்த புதல்வர், விக்ன நிவர்த்தகர்.

## " த்ரிஸஹஸ்ர முனிச்வரர் "

நடராஜ ஸமம் தேவம் த்ரிஸஹஸ்ர முனீச்வரம் |
நடேச பூஜகம் வந்தே தில்லாரண்ய நிவாஸினம் ||

"தில்லை மூவாயிரவருள் நானும் ஒருவன்" என்று ஸ்ரீ நடேசரால் புகழப்பட்ட ஸ்ரீ நடராஜஸம மான த்ரிஸஹஸ்ர முனீச்வரமூர்த்தி. மஹேசரூபமான இவருடைய வழிபாட்டால் சிவப்ரீதி ஏற்படுகிறது எனக்கருதியே தனித்து இம் மூர்த்தி ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. இவர்களுடைய சிறப்பு சிதம்பர மஹாத்மியத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.



# அறுபத்து மூன்று நாயன்மார்கள் (சிவனடியார்கள்)

| எ. நெ. | வடமொழியில் பெயர். | தமிழில் பெயர். | ஜாதி | குருபூஜை நாள். | பெரிய புராண அத்யாயம் | உபமன்யு பக்த விலாஸம் அத்யாயம் |
|---|---|---|---|---|---|---|
| 1 | ஸ்ரீ நீலகண்ட குலாலர் | திருநீலகண்ட நாயனார் | குயவர் | தைமீ விசாகம் | 3 | 18 |
| 2 | ஸ்வபாவரிபு (பக்தேங்கிதப்ரதர்) | இயற்பகை நாயனார் | வைச்யர் | மார்கழிமீ உத்திர நக்ஷத்திரம் | 4 | 19 |
| 3 | இலாநந்தகுமாரர் | இளையான்குடிமாற நாயனார் | வேளாளர் | ஆவணிமீ மகம் | 5 | 20 |
| 4 | ஸத்யார்த்தநாதர் | மெய்ப்பொருள் நாயனார் | குறுநிலமன்னர் | கார்த்திகைமீ உத்திரம் | 6 | 21 |
| 5 | விரோத்படர் (வீரயீந்தர்) | விறன்மிண்ட நாயனார் | வேளாளர் | சித்திரைமீ திருவாதிரை | 7 | 22 |
| 6 | அமரநீதி | அமர்நீதி நாயனார் | வைச்யர் | ஆனிமீ பூர நக்ஷத்திரம் | 8 | 23 |
| 7 | ஸ்ரீ வீரபக்தர் (தாரன்) | எறிபத்த நாயனார் | சிவத்விஜர் | மாசிமீ ஹஸ்த நக்ஷத்திரம் | 9 | 24 |
| 8 | ஏனாதிநாதர் | ஏனாதி நாயனார் | சான்றார் | புரட்டாசி உத்தராட்டம் | 10 | 25 |
| 9 | நேத்ரார்பகர் (திரங்ஷாதர்) | கண்ணப்ப நாயனார் | வேடர் | தைமீ மிருக சீருஷம் | 11 | 26 |
| 10 | ஸ்ரீ கலாநாதர் | குங்குலியக்கலய நாயனார் | பிராம்மணர் | ஆவணிமீ மூலம் | 12 | 30 |
| 11 | மானகஞ்சநதிச்வரர் (மானவிக்ரமபூபாலர்) | மானக்கஞ்சாற நாயனார் | வேளாளர் | மார்கழிமீ சுவாதி | 13 | 31 |
| 12 | தாயர் (சங்குலாதாயர்) | அரிவாட்டாய நாயனார் | வேளாளர் | தைமீ திருவாதிரை | 14 | 32 |
| 13 | கோநாதர் | ஆனாய நாயனார் | இடையர் | கார்த்திகை ஹஸ்தம் | 15 | 33 |
| 14 | மூர்த்திநாதர் | மூர்த்தி நாயனார் | வைசியர் | ஆடிமீ கார்த்திகை | 16 | 34 |
| 15 | ஸ்கந்தநாதர் | முருக நாயனார் | பிராம்மணர் | வைகாசிமீ மூலம் | 17 | 35 |
| 16 | பசுபதி (ஸ்ரீ ருத்திரபசுபதி) | உருத்திரபசுபதி நாயனார் | பிராம்மணர் | புரட்டாசிமீ அச்வினி | 18 | 36 |
| 17 | ச்வோகந்தா (ஸ்ரீ நந்தர்) | திருநாளைப்போவார் நாயனார் | புலையர் | புரட்டாசிமீ ரோகினி | 19 | 37 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 18 விசாரபக்தர் (பக்தேங்கித வேத்தா) | திருக்குறிப்புத்தொண்ட நாயனார் | ஏகாலியர் | சித்திரைமீ சுவாதி | 20 | 38 |
| 19 சண்டேச்வரர் | சண்டேசுர நாயனார் | பிராம்மணர் | தைமீ உத்தரம் | 21 | 39 |
| 20 ஜிஹ்வாராஜர் (வாகீசர்) | திருநாவுக்கரசு நாயனார் | வேளாளர் | சித்திரைமீ சதயம் | 22 | 40 |
| 21 குலபக்ஷர் (குலபந்தனர்) | குலச்சிறை நாயனார் | மரபறியாதவர் | ஆவணிமீ அனுஷம் | 23 | 44 |
| 22 மிதிலாத்விஜசூரர் (குரும்ப பக்தர்) | பெருமிழலைக்குறும்ப நாயனார் | மரபறியாதவர் | ஆடிமீ சித்திரை | 24 | 45 |
| 23 பூதவதி (புனீதவதி) | காரைக்காலம்மையார் | வைசியர் | பங்குனிமீ சுவாதி | 25 | 46 |
| 24 தத்பூதி (அத்பூதி) | அப்பூதியடிகணாயனார் | பிராம்மணர் | தைமீ சதயம் | 26 | 47 |
| 25 நீலநக்னர் | திருநீலநக்க நாயனார் | பிராம்மணர் | வைகாசிமீ மூலம் | 27 | 48 |
| 26 நமிநந்தி | நமிநந்தியடிகணாயனார் | பிராம்மணர் | வைகாசிமீ பூசம் | 28 | 49 |
| 27 ஸ்ரீ ஞானசம்பந்தர் | திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் | பிராம்மணர் | வைகாசிமீ மூலம் | 29 | 50 |
| 28 கலிகாமர் | ஏயர்கோன்கலிக்காம நாயனார் | வேளாளர் | ஆனிமீ ரேவதி | 30 | 58 |
| 29 மூலதேவர் (மூலநாதர்) | திருமூல நாயனார் | இடையர் | ஐப்பசிமீ அச்வினி | 31 | 62 |
| 30 தண்டிபக்தர் | தண்டியடிகணாயனார் | மரபறியாதவர் | பங்குனிமீ சதயம் | 32 | 63 |
| 31 மூர்க்கர் | மூர்க்க நாயனார் | வேளாளர் | கார்த்திகைமீ மூலம் | 33 | 64 |
| 32 சோமயாஜிமாறர் (மாறசோமயாஜி) | சோமாசிமாற நாயனார் | பிராம்மணர் | வைகாசிமீ ஆயில்யம் | 34 | 65 |
| 33 சாக்யநாதர் | சாக்ய நாயனார் | வேளாளர் | மார்கழிமீ பூராடம் | 35 | 67 |
| 34 நிரோதசார்தூலர் (நரசார்தூலர்) | சிறப்புலி நாயனார் | பிராம்மணர் | கார்த்திகைமீ பூராடம் | 36 | 68 |
| 35 தப்ரபக்தர் | சிறுத்தொண்ட நாயனார் | (பிராம்மணர்) மகாமாத்திரர் | சித்திரைமீ பரணி | 37 | 69 |
| 36 சேர பூபாலர் | சேரமான்பெருமாள் நாயனார் | க்ஷத்திரியர் | ஆடிமீ சுவாதி | 38 | 73 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 37 கணநாதர் | கணநாத நாயனுர் | பிராம்மணர் | பங்குனிமீ திருவாதிரை | 39 | 74 |
| 38 க்ருதாந்தகர் (பராந்தகர்) | கூற்றுவ நாயனுர் (திருக்கூட்டத்தார்) | குறுநிலமன்னர் | ஆடிமீ திருவாதிரை | 40 | 75 |
| 39 அசத்யதாஸ்யரஹிதகவி (சத்யதாசர்) | பொய்யடிமையில்லாத புலவர் (திருக்கூட்டத்தார் | மரபறியாதவர் | — | 41 | 76 |
| 40 கீர்த்தி சோழர் (தர்மகேதனர்) | புகழ்சோழ நாயனுர் | க்ஷத்திரியர் | ஆடிமீ கார்த்திகை | 42 | 77 |
| 41 நரசிம்ஹமுனி (ந்ருஸிம்மர்) | நரசிங்கமுனையரை நாயனுர் | குறுநிலமன்னர் | புரட்டாசிமீ சதயம் | 43 | 78 |
| 42 அதிபக்தர் | அதிபத்த நாயனுர் | பரதவர் | ஆவணிமீ ஆயில்யம் | 44 | 79 |
| 43 கலிக்கம்பர் | கலிங்கம்ப நாயனுர் | வைசியர் | தைமீ ரேவதி | 45 | 80 |
| 44 கலிநீதி | கலிய நாயனுர் | செக்கார் | ஆடிமீ கேட்டை | 46 | 81 |
| 45 சக்திநாதர் | சத்தி நாயனுர் | வேளாளர் | ஐப்பசி பூசம் | 47 | 82 |
| 46 காடவராஜர் (பஞ்சபாதர்) | ஐயடிகள்காடவர்கோ நாயனுர் | குறுநிலமன்னர் | ஐப்பசிமீ மூலம் | 48 | 83 |
| 47 கஜேலபர் (மாலாத்ருணகர்) | கணம்புல்ல நாயனுர் | மரபறியாதவர் | கார்த்திகைமீ கார்த்திகை நக்ஷத்திரம் | 49 | 84 |
| 48 காரிநாதர் (அவிகாரி) | காரி நாயனுர் | மரபறியாதவர் | மாசிமீ பூராடம் | 50 | 85 |
| 49 தீர்க்கமாரர் (சுந்தர பாண்டியர்) | நின்றசீர் நெடுமாற நாயனுர் | க்ஷத்திரியர் | ஐப்பசிமீ பரணி | 51 | 86 |
| 50 வாக்மி (வாயுலர்) | வாயிலார் நாயனுர் | வேளாளர் | மார்கழி ரேவதி | 52 | 87 |
| 51 நாசீரபஞ்சனர் (சூரபித்) | முனையடுவார் நாயனுர் | வேளாளர் | பங்குனிமீ பூசம் | 53 | 88 |
| 52 பாதசிம்ஹர் (ஸிம்ஹாங்க) | கழற்சிங்கனுயனுர் | குறுநிலமன்னர் | வைகாசிமீ பரணி | 54 | 89 |
| 53 இடங்க்ருணி: (ஐடங்கர்) | இடங்கழி நாயனுர் | க்ஷத்திரியர் | ஐப்பசிமீ கார்த்திகை | 55 | 90 |
| 54 ரணமித்ரர் (யுத்தசகர்) | செருத்துணை நாயனுர் | வேளாளர் | ஆவணிமாதம் பூசம் | 56 | 91 |
| 55 கீர்த்திமித்ரர் (கீர்த்திசகர்) | புகழ்த்துணை நாயனுர் | ஆதிசைவர் | ஆவணிமாதம் ஆயில்யம் | 57 | 92 |
| 56 விரசார்த்தூலர் (சூரவியாக்ரர்) | கோட்புலி நாயனுர் | வேளாளர் | ஆடிமாதம் கேட்டை | 58 | 93 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 57 | பக்தபூதப்ரணான்த்ருசங்கர் | பத்தராய் பணிவார் | மரபறியாதவர் | — | 59 | — | 33 |
| 58 | பரமைகாபிகாத்ருசங்கர் | பரமனையேபாடுவார் | மரபறியாதவர் | — | 60 | — | 34 |
| 59 | சிவவிங்யஸ்த்த சங்கம் | சித்தத்தைசிவன்பாலே வைத்தார் | மரபறியாதவர் | — | 61 | — | 35 |
| 60 | கமலாலயபூதர் | திருவாரூர்ப் பிறந்தார் | மரபறியாதவர் | — | 62 | — | 36 |
| 61 | திரிகாலசிவாங்கஸ்பர்சர் | முப்பொழுதும் திருமேணி தீண்டுவார் | ஆதிசைவர் | — | 63 | — | 37 |
| 62 | பூர்ணபஸ்மாங்கராகிணர் | முழுநீறுபூசிய முனிவர் | மரபறியாதவர் | — | 64 | — | 38 |
| 63 | பரஸ்தாத்தேச பக்தர் | அப்பாலுமடிச்சார்ந்தார் | மரபறியாதவர் | — | 65 | LJP | 39 |
| 64 | பூசலர் (சங்புத்யாயி) | பூசலார் நாயனார் | பிராமணர் | ஐப்பசி மாதம் அனுஷம் | 66 | 94 | 40 |
| 65 | மாஹிலாகுல நாயிகா (மஹிலேசி) | மங்கையர்க்கரசியார் | க்ஷத்திரியர் | சித்திரைமாதம் ரோகிணி | 67 | 95 | 41 |
| 66 | ஸ்னேஹநாதர் (பக்தப்ரியர்) | நேச நாயனார் | சாலியர் | பங்குனிமாதம் ரோகிணி | 68 | 96 | 42 |
| 67 | அருணாக்ஷர் (ஸ்ரீ சோணாக்ஷர்) | கோச்செங்கட்சோழ நாயனார் | க்ஷத்திரியர் | மாசிமாதம் சதயம் | 69 | 97 | 43 |
| 68 | நீலகண்டர் (நீலகண்ட காயனார்) | திருநீலகண்டயாழ்ப்பான நாயனார் | பாணர் | வைகாசிமாதம் மூலம் | 70 | 98 | 44 |
| 69 | கபர்தி (ஜடிலர்) | சடைய நாயனார் | ஆதிசைவர் | மார்கழிமாதம் திருவாதிரை | 71 | 99 | 45 |
| 70 | சிவஞானினி | இசைஞானியார் | ஆதிசைனர் | சித்திரைமாதம் சித்திரை நக்ஷத்திரம் | 72 | — | 45 |
| 71 | சுந்தரர் | சுந்தரர் | ஆதிசைவர் | ஆடிமாதம் சுவாதி | 1 | 1 | 1 |

இச்சிவனடியார்களின் இதிரஸவத்தான சரித்ரங்கள் வடமொழியில் உபமன்யு, அகஸ்த்ய, ஹரதத்த, பக்தவிலாஸத்திலும், தென்மொழியில் பெரிய புராணத்திலும் விரிவாகவும் அழகாகவும் கூறப்பட்டுள்ளன. ஆகையால் இங்கு விளக்காது விடுத்தனம்.

## ஸ்ரீ அர்த்தநாரீச்வரர்

யதர்தாங்கம் நாரீ விலஸதி பராகாந்தி ருசிர |
பராங்கம், பும்ரூபம், ஜயதிச ஜடாஜூட ருசிரம் ||
ஸதாச்ருங்காரித்வம் வஹதி வபுனஷவம் த்ரிபுவனே |
நம : தஸமை கஸ்மைசித் அகில வீவர்த்தாய மஹஸே ||

சிவசக்தி ஐக்யத்தை போதித்துக் கொண்டு விளங்கும் அழகான மூர்த்தி. இதன் வழிபாட்டால் விவாஹப் பிராப்தியும், தம்பதிகளின் ஒற்றுமையும் ஏற்படும். கல்யாணத்திற்காகவும், கல்யாணததிற்கு பிறகும் மாலே முதலியன சாத்தி விசேஷ வழிபாடுகள் அடிக்கடி நடைபெறுகின்றன.

## ஸ்ரீ சுந்தர விஞயகர்

வாமாங்காரூட வாமூரு வக்ஷோஜாவித புஷ்கரம் |
விக்ன வாரண ஹர்யக்ஷம் விக்ணராஜம் உபாஸ்மஹே ||

இவர் அழகான விஞயகர். இவர் வழிபாட்டால் இடையூறுகள் நிவர்த்தியாகும்.

## ஸ்ரீ மஹாலிங்கம்

மஹாலிங்கம் மஹாபாகம் மஹேச்வரம் உமாபதிம் |
மஹாசேன குரும் வந்தே மஹாபய நிவாரணம் ||

(திருவிடைமருதூர்) மத்யார்ஜுன க்ஷேத்திரத்தில் விளங்கும் மூர்த்தி இவர். சிதம்பர தாண்டவ தெரிசனத்திற்காக வந்தவர் இவர். இம்மூர்த்தியிலிருந்தே "சத்யம், அத்வைதம்" என்று ஓர் அசரீரி வாக்கு ஏற்பட்டது. ஸ்ரீ ஆதிசங்கர பகவத்

பாதாளின் முன்னிலையில் என்றும் கதையால் சிதம்பரம் அத்வைத க்ஷேத்திரம் என்பதை எண்பிக்கவே சிதம்பரத்தில் இம்மூர்த்திக்கு நிலையான வாசம் ஏற்பட்டது என்று பெரியோர் கூறுவர்.

## ஸ்ரீ ப்ருஹத்சுந்தரகுசாம்பாள்

மஹாலிங்கஸ்ய மஹிஷீம் மஹநீயாம் தயாநிதிம் |
ஸ்ரீ ப்ரஹத் ஸௌந்தர குசாம் அம்பாம் வந்தே அகிலேஷ்
டதாம் ||

ஸ்ரீ மஹாலிங்கரின் தருமபத்தினி. இவ்வம்பாளை ஆராதிப்பதால் பெண்களுக்கு சிறந்த அழகு, சௌபாக்யம் ஏற்படும் என்பது ஆன்றோர்களின் கொள்கை.

## ஸ்ரீ துவாரபாலகர்

இவர் விஜயன் என்று பெயர் உள்ளவர்.

## ஸ்ரீ சண்டிகேசர்

மூலநாத பதாம்போஜ பரிஸ்புரித மானஸ |
சம்போ: சேவா பலம் தேஹி ப்ரம்மன்சண்ட
நமோஸ்துதே ||

இங்கு ப்ரம்மாவுடன் சண்டிகேசர் வீற்றிருக்கின்றார். மற்றைய ஏனைய சிவஸ்தலங்களில் சண்டிகேசர் மட்டும் தான் காட்சி அளிக்கின்றார். ஆதலால் இவருக்கு நிவேதனம் செய்யப்பட்ட அன்னத்தை ஸ்வீகரிப்பது மிகச் சாலச்சிறந்தது என்பதை அறிவுறுத்துவதே இவ்வமைப்பின் கருத்து. இவருடைய வழிபாட்டால் சிவசேவா பலன் சித்திக்கும்.

## ஸ்ரீ அருணாசலேச்வரர்

ஆதாராசல கைதவாத் அதிசிரம் பிண்டீக்ருதம் பாவகம் |
ரக்ஷன் தக்துமிவ அகிலம் பிரதிமுகு: கல்பான்தகாலேஜகத் ||

பாயாத் ந : கருணம்ருத ஊர்மி சரணை : ஆலோகனை :
ஆனதான் |
ஏனுங்கார்த்த சிகாயுத: ஸபகவான் சோண சலாதீச்வர: ||

அபிதாகுசாம்பாள் சமேதராக தேஜோ க்ஷேத்திரமான திருவண்ணமலையில் விளங்கும் இம்மூர்த்தி ஸ்ரீ நடேசருடைய தாண்டவ தெரிசனத்திற்காக இங்கு வந்து நிலைத்து இருந்து விட்டார். ஆகையாலேயே திருவண்ணமலையிலிருந்தும் மணி வாசகர் சிதம்பரத்தை தனது ஸ்துதி கிரந்தத்தை செய்தார் என்று கூறுகின்றனர். கார்த்திகைமாத கிருத்திகையில் விசேஷ ஆராதனைகள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ மூலானந்தகூபம்

இந்த தீர்த்தத்தாலேயே ஸ்ரீமூலநாதருக்கும், உமாம்பி கைக்கும் அபிஷேகங்கள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ சாஸ்தா

(ஹரிஹரபுத்தரர், ஐயனர் ஐயப்பன்)

ஹரே: ஸ்ரீ மோகினி ரூப தாரிண: ஸ்ரீ சிவஸ்யச |
ஜாதம் சாஸ்த்தாரம் ஈசானம் வந்தே சக்தி த்வயான் விதம் ||

பூர்ணை புஷ்கலை என்றும் இரு சக்திகளுடன் கூடியவர். மஹாவிஷ்ணுவின் மோகினி அவதாரத்தில் பரமசிவனுக்கும், மோஹினிக்கும் புத்தரனக அவதரித்தவர். இவரது வழி பாட்டால் பூதாதி பயநிவர்த்தி ஏற்படும்.

## கல்யாண மண்டபம்

இது அழகான மண்டபம். ஆனி, மார்கழிமாத மஹோத் ஸவங்களில் பஞ்சமூர்த்திகளுக்கு அபிஷேக, அலங்கார, ஆராதனைகள் இங்கு செய்த பிறகே புறப்பாடு ஆகும்.

## யாகசாலை

ஆனி, மார்கழிமாத மஹோத்ஸவங்களில் இங்கு நடுவில் உள்ள மேடையில் கலசஸ்தாபனம் செய்து பூஜைகளும், இங்கு அமைந்துள்ள குண்டங்களில் ஹோமங்களும், காலை, மாலை இரு வேளைகளிலும் நடைபெறுகின்றன.

## தேவஸபை

இது தேவசபை ஐந்து சபைகளில் ஒன்ருகும். இவ்விடத்தில் ஸோமாஸ்கந்தர் முதலிய உத்ஸவமூர்த்திகள் இருக்கின்றன. இந்த சபையின் மேற்புறத்தரையில் பகவானுடைய ஏராளமான ஆபரணங்கள்வைத்து பாதுகாக்கப்படுகின்றன. தில்லைவாழ் அந்தணர்கள் இங்கு அடிக்கடி கூட்டம் கூடி ஆலய விவகாரங்களைப் பேசுவார்கள். ஆரம்ப சமயத்தில் ஒரு வெள்ளி விளக்கில் ஸ்ரீமன் நடராஜமூர்த்தியை ஆவாகனம் செய்து அந்த தீபத்தின் முன்னிலையில் விவகாரங்களை தொடங்குவார்கள். இங்கு எல்லா தேவதைகளும் வசிப்பதாலும் மகாஸபை கூடுவதாலும் இச்சபைக்கு "பேர் அம்பலம்" என்றும் பெயர் உண்டு. இந்த சபையில் தான் தில்லைவாழ் அந்தணர்களின் முன்னிலையில் திருநீலகண்ட நாயனுர் என்ற பெரியபுராண முதல் பக்தர் தனக்கும் பரதேசி உருவம் கொண்ட பரமசிவனுக்கும் ஏற்பட்ட பிக்ஷா பாத்திரத்தின் வழக்கை முடிவு செய்து கொண்டார். இதன் விரிவை திருநீலகண்ட நாயனுர் சரித்திரத்தில் காண்க.

## ஸ்ரீ சட்டநாதர்

தேவோ, பைரவ நாமவாந், சுநி, மஹாதேவா க்ஞயா, ய:
ஸ்தித: |
விருத்தம், வாமனம், ஏத்ய, வக்ஷஸி, ஜகான, ஏகேன, தம்,
பாணிநா ||

உத்கிருத்ய, த்வசம், அஸ்ய, கஞ்சு கதயா, ச, ஆத்மானம்,
அஸ்மிந், ததள |
தம், வந்தே, ஸுகதம், சிதம்பரபுரே, ஸ்ரீ சட்டநாதம்
ஸ்திதம் ||

மகாபலி சக்ரவர்த்தியின் கர்வத்தை அடக்குவதற்காக வாமன உருக்கொண்ட மதம் பிடித்து உலகை அழிக்க முற்பட்ட மகாவிஷ்ணுவை நிக்கிரஹம் செய்வதாக அவரது தோலை உரித்து சட்டையாக அணிந்து கொண்டு உலகங்களை காப்பாற்றினர் என்பது புராண வரலாறு

## ஸ்ரீ நவரக்ரகங்கள்

ஸூர்யாய, லோககுரவே, தரணீ ஸுதாய |
சுக்ராய, சீதருசயே, விதுநந்தனாய! இந்திராதி தேவ குரவே,
கேதுக்ரகாய சுபதாய நமாம்ஸி நித்யம் || [சனிராகவேச,

நடுவில் கிழக்கு முகமாக சூர்ய மூர்த்தியும், அதன் தென் புறத்தில் நடுவில் அங்கார மூர்த்தியும், கிழக்கில் நடுவில் கிழக்கு முகமாக சுக்ரமூர்த்தியும், அக்னி மூலையில் மேற்கு முகமாக சந்திரமூர்த்தியும், ஈசான்ய மூலையில் கிழக்கு முகமாக புதமூர்த்தியும், வடக்கில் வடக்கு முகமாக பிரகஸ்பதி மூர்த்தியும் (குரு), மேற்கில் காக வாகனத்தில் சனைச்சர மூர்த்தியும், நிர்ரித மூலையில் தெற்கு முகமாக ராகு மூர்த்தியும், வாயு மூலையில் தெற்கு முகமாக கேது மூர்த்தியும், பிரகாசிக்கின்றார்கள். கிழக்கு முகமாக தனியாக ஆராதனங்களின் சௌகர்யத்திற்காக சனி பகவான் பிரதிஷ்டை செய்யப்பட்டு இருக்கிறார். சனி பகவானுக்காக பிரசித்திப்பெற்ற திருநள்ளாறு க்ஷேத்திரத்தில் செய்யக் கூடிய பிராத்தனைகளையும் இவ்விடத்திலேயே பலர் செலுத்துவது பழக்கம் உண்டு. சனிக்கிழமைகளிலும் அமாவாசையிலும் விசேஷ அபிஷேக அர்ச்சனை ஜபங்கள் நடைபெறுகின்றன.

## ஸ்ரீ சங்கூதி விநாயகர்

கல்பாந்தகாலே, சிசு ரூப தாரீ, சங்கம், சமாதாய, மகாஸ்வனேன |
தத்மௌ, ஹரி, ய: காஞ்சன ஸத்ம நாதம் சங்கத்ம விக்னேச்வரம், ஆத்யம், ஈடே |

மேற்கு முகமாக சங்கு ஊதிக்கொண்டு பால உருவில் அழகாக அமர்ந்து இருக்கும் இப்பால விநாயகர் குழந்தைகளின் ஆரோக்யத்தையும், மக்கட்பேறு அற்றவர்க்கு புத்ர சந்தானத்தையும், அளித்துக் கொண்டு விளங்குகின்ருர். மக்கள் மேற்கண்ட கோரிக்கைக்காக வேண்டுதலை செய்து கொண்டு பயனை அடைந்து வழிபட்டு வருவதை இன்றும் காணலாம்.

## ஸ்ரீ அர்த்தஜாம சுந்தரர் [அழகர்]

சுந்தரம் சிவ ரக்ஷாயாம் தத்பரம் சிவகிங்கரம் |
நமாமி சிவஸேவாயா: பலலாபாய பாஸ்வரம் |

சங்கூதி விநாயகருக்கு வடபுறத்தில் இருக்கும் இவர் ஒரு பக்த சிரேஷ்டர். சிவதரிசனம் முடிந்தபின் இவரை வழிபட்டு சிவசேவா பலத்தை வேண்டுவது பக்தர்களின் மரபு. அர்த்தஜாம காலத்தில் பூஜையின் இறுதியில் ஸ்ரீமன் நடராஜ மூர்த்தியை பூஜை செய்யும் தில்லை வாழ் அந்தணர்கள் இவருக்கும் பூஜை செய்கிருர்கள்.

## குடகு அறை

ஸ்ரீ நடராஜ ஸன்னிதானத்திற்கு செல்லும் புகுமுக வாசல். இங்கு இருபுரத் தூண்களிலும் தேவமாதர்களான ரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை என்று பெயரு

டையவர்கள் பக்தர்களை வரவேற்க கையில் அழகிய மலர்கள் நிரம்பிய மலர்க்கொடிகளுடன் சிங்காரமாக காக்ஷி தருகின்றனர். இவர்களுடைய ஆனந்த உருவம், உள்ளே காணப்போகும் பிரம்மபரமானந்த தாண்டவமூர்த்தியின் ஆனந்தப் பிரவாஹ அனுபவத்தை போதிக்கின்றது என்பது தத்வமறிந்தவர்களின் கருத்து. உள்ளே சென்று, தென்புறப்படிக்கட்டின் வழியே சென்று, கிழக்கு வாயிலில் உள்ள ஸ்ரீ கோவிந்தராஜரின் முன்புறமுள்ள தாம்பர த்வஜஸ்தம்பத்தை வலமாக வந்து, அங்குள்ள கருடனை வணங்கி, சிறிது மேற்புரம் சென்று, நடுவில் உள்ள கமலத்தின் நடுவே நின்று, ஹரிஹரர்களை வழிபட்டு, தென்புறமாக சென்று, ஸ்ரீ நடராஜரின் தங்க த்வஜஸ்தம்பத்தை வலமாகவந்து, ஸ்ரீ கோவிந்தராஜரின் ஸன்னதிக்குள் செல்ல வேண்டும். நிற்க,

## தாம்ரத்வஜஸ்தம்பம்

இது கோவிந்தராஜ பெருமானின்த்வஜஸ்தம்பம், ஸமீப காலத்தில் நிறுவப்பட்டது. ஸ்ரீ கோவிந்தராஜமூர்த்தி பரிவாரமூர்த்தி ஆனதால் த்வஜாரோஹண உத்ஸவம் நடைபெறுவதில்லை. இது அழகிற்காகவே வைக்கப்பட்டுள்ளது. ஆகையினாலேயே கொடியை ஏற்றக்கூடிய ராட்டின யந்திரம் இதில் கிடையாது.

## ஸ்ரீ கருடாழ்வார்

வைநதேயம் சபக்ஷீந்த்ரம் விஷ்ணுவாஹனம் மஹோத்தமம் |
ஸர்பாரிசம் கருடம் வந்தே ஸர்பபீதி நிவாரகம் |

இந்த தாம்பர த்வஜஸ்தம்பத்தின் அடியில் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாளின் வாஹனபூதரான கருடாழ்வார் உள்ளார். இவரை தர்சித்த பிறகு தான் ஸ்ரீ கோவிந்தராஜமூர்த்தியை

தர்சிப்பது முறை. ஸ்ரீ கருடமூர்த்தியின் பெருமையை ஸ்ரீ க்ருடோபநிஷத்தில் காண்க. வியாழக்கிழமையில் இவரது தர்சனமும் வழிபாடும் வேண்டிய வரனை அளிக்கவல்லது என்பது சான்றோர்களின் துணிபு.

## கமலம்.

ஸ்ரீ நடராஜ ஸ்ரீ கோவிந்தராஜ மூர்த்திகளின் நடுவே உள்ளது. இதில் நின்றுகொண்டு இரு மூர்த்திகளையும் ஒரே ஸமயத்தில் தர்சிக்கும் வாய்ப்பை அளிக்கும் இடம். இங்கு இருந்துகொண்டேதான் ஸ்ரீ அப்பய்யதீக்ஷித மஹான் "மார மணம் உமாரமணம்" என்னும் தசச்லோகங்களால் துதித்த னர் என்று பெரியார்கள் கூறுவர். இடது கண்ணால் கோவிந்த ராஜரையும் (சிவனின் இடதுபுறம் விஷ்ணுவின் அம்சம், அதுவும் சக்தியபின்னம், ஆதலால் இடது கண்ணால் சிவசக்தி ரூபமான விஷ்ணுவை வழிபடவேண்டும். ஆகவே ஸ்ரீ நடராஜரை பெருமான் என்றும் (ஆண்பால்) ஸ்ரீ கோவிந்தராஜரை பெருமாள் (பெண்பால்) என்றும் கூறுகின் றனர், என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிவு). வலது கண் ணால் ஸ்ரீ நடராஜரையும் வழிபடவேண்டும். நாமும் அவ் வாறே கண்டு துதிப்போம்.

வந்தே சங்ககபால பூஷிதகரௌ மாலாஸ்தி மாலாதரௌ |
தேவௌ த்வாரவதீஸ் மசான நிலயௌ நாகாரி
கோவாஹநௌ ||
த்வித்ரயக்ஷௌ பலிதக்ஷயக்ஞ மதநௌ ஸ்ரீசைல
ஜாவல்லபௌ
பாபம்மேஹரதாம் ஸதா ஹரிஹரௌ ஸ்ரீவத்ஸ
கங்காதரௌ ||

இங்கு நின்று இவ்வாறு ஸ்தூலமாக வழிபட்டுவிட்டு ஸூக்ஷ்மமான ஆதிதைவிக தஹரோபாஸனத்தைச் செய்ய வேண்டும். அதாவது ஸ்ரீ கோவிந்தராஜரை நமது ஹ்ருத யத்தில் வருவித்து அவருடைய ஹ்ருதயத்தில் ஸ்ரீ நடராஜரை வழிபடுவதே. அவ்வாறே கூறுகின்றனர் ஞானிகள்.

நாராயணம் ஹ்ருதி விபாவ்ய தத்யஹார்தாகாசே சிவம்
கிரிஜயா ஸஹிதம் மஹேசம் |
ஸஞ்சிந்தயேத் ஸததாமேவம் உபாஸனேன ஸித்திம்
லபேதநியதம் நிருபாதிகாம்தாம் ||

## ஸ்ரீ கோவிந்தராஜர் ஸன்னிதி
## ஸ்ரீ ஹிரண்யநரஸிம்மர்

ஸ்தம்பேஸ்மிந் அபி ஸத்யம் அஸ்தி ஸஹரி: தர் ஹி இஹ
ஹந்யாம் அமும்
விஷ்ணும் வஞ்சிததானவம் மம ரிபும் தூர்த்தம் மஹா
மாயினம் |
இதிஆக்ருச்ய ருஷா ஹிரண்யகசிபும் ஸ்தம்பம் விபேத்தும்
பதா
க்னந்தம்ய: தரஸா ஜகான பகவான்தம் ஸ்ரீந்ருஸிம்ஹம்
பஜே ||

உள்ளே ப்ராகாரத்தில் முதலில் வடக்கு நோக்கி இருக்கும் மூர்த்தி ஹிரண்யநரஸிம்ஹர். தூணிலும் துரும்பிலும் ஸ்ரீ விஷ்ணு உள்ளார் என்று குமாரனை ப்ரஹ்லாதனுல் கூறப்பட்டு கோபமடைந்து இந்த தூணில் அந்த உன்னுல் கூறப்பட்ட ஹரி இருப்பானேயானுல் இங்கேயே அந்த அரக்கர்களை ஏமாற்றியவனும் துஷ்டனும், மஹா மாயை உள்ளவனும், எனது எதிரியுமான விஷ்ணுவை கொலை செய்வேன்" என்று கூக்குரலிட்டு தூணைப் பிளப்பதற்காக காலினுல் உதைத்த ஹிரண்யகசிபுவை வேகமாகக் கொன்று பிரஹ்லாதனுக்கு அனுக்ரஹம் செய்த மூர்த்தி. இவரது அருளால் சத்ரு பயம் நீங்கும்.

## ஸ்ரீ ஸுதர்சனம்

ஸுதர்சனம் மஹாவேகம் கோவிந்தஸ்ய ப்ரியாயுதம் |
ஜ்வலத்பாவக ஸங்காசம் ஸ்ரீசக்ரம் ப்ரணமாமி அஹம் ||

ஸ்ரீ நரஸிம்மமூர்த்திக்கு கீழ்புறத்தில் உள்ளது ஸுதர்சனம், சக்ரம் என்ற பெயரால் வழங்கப்படுவது, ஸ்ரீ விஷ்ணுவினுல் வலது கையில் தாங்கப்படும் ஆயுதம். நெருப்புபோல் பிரகாசிக்கக்கூடியது. மஹாவேகத்துடன் சென்று சத்ருக்களைக் கொல்லும் திறமை வாய்ந்தது. இதனுடைய வழிபாட்டால் பெண்களுக்கு ஸுகப்ரஸவம் ஏற்படும் எனப் பெரியோர்கள் கூறுகின்றனர்.

## ஸ்ரீ பாஞ்சஜன்யம்

க்ஷீரஸாகர ஸம்ஜாதம் விஷ்ணுநா வித்ருதம்கரே |
பூஜிதம் ஸர்வதேவைச்ச பாஞ்சஜன்யம் நமாம்யஹம் ||

நரஸிம்மருக்கு மேற்புறத்தில் உள்ளது. விஷ்ணுவின் இடதுகையில் உள்ளது. பால் ஸமுத்ரத்தை தேவாஸுரர்கள் கடைந்தபொழுது உண்டானது. ஸர்வ தேவர்களால் வழிபடப்பட்டது. இதன் நாதம் (ஒலி) அரக்க ஸ்த்ரீகளின் கர்ப்பத்தை தூள் தூளாக சிதறடித்தது. இதன் நடுவில் ஸகல புண்ய தீர்த்தங்களும் உள்ளன. ஆதலால்தான் சங்காபிஷேகம் சிறந்தது என பெரியோர்கள் கூறுகின்றனர்.

## ஸ்ரீ வேணுகோபாலர்

ருக்மிணீ ஸத்தியபாமாப்யாம் ஸம்யுதம் தேவகிஸுதம் |
கீதோபதேசகம் வேணுகோபாலம் ப்ரணமாமி அஹம் |

ருக்மிணீ ஸத்யபாமாதேவிகளுடன் பிரகாசிக்கும் மூர்த்தி கையில் புல்லாங்குழலை வைத்துக்கொண்டு மதுரமாக கானம் செய்துகொண்டு, பசுக்களை மேய்த்துக்கொண்டும், கோபிகைகளுடன் லீலாவிநோதங்கள் செய்துகொண்டும், மக்களை ஆனந்தக்கடலில் ஆழ்த்துகிருர் ஸ்ரீ வேணுகோபாலர். இவரே அர்ஜுனனுக்கு கீதோபதேசம் செய்தருளினுர். பல அரக்கர்களை அழித்தார். இவரது மஹிமையை வர்ணிக்கும் ஸ்ரீமத் பாகவதத்திலும் ஸ்ரீ கிருஷ்ண உபநிஷத்திலும் காணலாம்

## ஸ்ரீ பதஞ்ஜலி

அனஸூயாஸுதம் தேவம் ஆதிசேஷம் பதஞ்ஜலிம் |
அத்ரே: ஸுநும் மஹாபாஷ்ய ரசிதாரம் அஹம்பஜே ||

ஸ்ரீ மகாவிஷ்ணுவின் படுக்கையாக இருந்துகொண்டு சேவிக்கும் ஆதிசேஷ பகவான். அத்ரிக்கும் அநஸூயாவிற்கும் மகனுகப் பிறந்து பதஞ்சலி என்னும் திருநாமங்கொண்டு விஷ்ணுவின் அருளால் சிதம்பரம் வந்து ஸ்ரீ நடராஜப் பெருமானின் பேரானந்தப் பெருந்தாண்டவம் கண்டு வணங்கி துதித்து அன்னாரின் அருளால் மஹாபாஷ்யம் என்னும் இலக்கணப் பெருநூலைச் செய்து விஷ்ணுவின் அருளை எண்பிக்க இந்த ஸன்னிதானத்தில் ஐந்துதலை பாம்பு படமெடுக்கும் உருவோடும் தேவ உருவோடும் காட்சியளித்துக்கொண்டு விளங்குகின்றார்.

## ஸ்ரீ கண்வர்

கண்வம் மகர்ஷி பிரவரம் கான்வசாகா பிரவர்த்தகம் |
சகுந்தலா போஷகந்தம் ஞானினம் பிரணமாமி அகம் ||

நடராஜ கோவிந்தராஜர்களை சேவிப்பதற்காக ஜடா மகுடதாரியாக எழுந்தருளியிருக்கும் மூர்த்தி வேதத்தின் ஒரு பிரிவைக் கண்டு வெளியிட்டதால் இவரது பெயராலேயே அப்பிரிவிற்கு கான்வசாகை என்னும் பெயர் பிரஸித்தியானது. இவருடைய வளர்ப்புப் பெண்ணே சகுந்தலை. துஷ்யந்தன் இல்லத்திற்குச்செல்லும் சகுந்தலைக்கு இவர் போதித்ததாகக் கூறும் நல்லுரை மிகச் சிறந்தது. இதன் விரிவு மகாகவி காளிதாஸ சாகுந்தலத்தில் மிகப் பிரசித்தமானது.

## ஸ்ரீ கருடாருட மூர்த்தி

தக்ஷஹஸ்தே சக்ரதரம் வாமஹஸ்தேச சங்ககம் |
ததம் கருடாருட மூர்த்திம் விஷ்ணும்பஜே அன்வஹம் ||

வலது கையில் சக்ராயுதத்தையும், இடது கையில் சங்கையும் வைத்துக்கொண்டு கருடன் மேல் ஏறிக்கொண்டு பக்தர்களுக்கு அபயமளித்துக்கொண்டு விளங்குகிறார். ஏகாதசி தினத்தில் இம்மூர்த்தியை வழிபடுவது சாலச் சிறந்ததாகும். இதன் அருகில் சுதர்சனம் என்னும் சக்கரமும் தனித்து அமைக்கப்பட்டுள்ளது.

## ஸ்ரீ ராமபாதங்கள்

ராமசந்திர பதாம்போஜ த்வயம் சம்ஸாரதாரகம்
அகல்யாரூப தாதாரம் பரமம் பிரணமாமி அகம் ||

ராமருடைய இத்திருவடி இரண்டையும் வழிபட்டால் சம்ஸார தரணம் ஏற்படும் என்பது பெரியோர்களின் வாக்கு. இதனுடைய ஸ்பரிசத்தாலேயே கல்லாகச் சமைந்துகிடந்த அகல்யைக்கு சுயஉருவம் கிடைத்தது ராமாயண பிரசித்தம்.

## ஸ்ரீ விஷ்வக்ஸேனர்

யஸ்ய த்விரதவக்த் ராத்யா பாரிஷத்யா பரச்சதம் |
விக்னம் நிக்னந்தி ஸததம் விஷ்வக்ஸேனம் உபாஸ்மஹே ||

சைவர்கள் விநாயகரை முதன்முதலில் வணங்குவது போல் வைஷ்ணவர்கள் இம்மூர்த்தியை எக்காரியங்களிலும் முதன்முதலில் வழிபட்டு இவரது அருளால் இடையூறுகள் நீங்கி காரியசித்தி பெறுகின்றனர்

## ஸ்ரீ ஹனுமார்

ஸ்ரீ மாருதிம் ஆஞ்சநேயம் ருத்ரஸ்ய அம்சம் மகாபலம் |
கபிவர்யம் மஹாப்ராக்ஞயம் ஹனுமந்தம் நமாமி அகம் ||

வாயுவிற்கும் அஞ்சனாதேவிக்கும் மகனாகப் பிறந்தவர் ருத்ரனின் அம்சபூதர். சூரியபகவானிடத்தில் நவ வியாகரணங்களையும் கற்றவர். கடல்கடந்து இலங்கையில் சீதை

யைக்கண்டு ராம ஸந்தேசத்தை தெரிவித்தவர். இலங்கையை எரித்தவர். ஔஷதி மலையைக் கொணர்ந்தவர். மஹா பலிஷ்டர். பிரம்மசாரி. ஸ்ரீ ராமபிரானின் திருவடிச் சேவையில் ஈடுபட்டவர். ராமருடைய நாமா கேட்குமிடங் களிலெல்லாம் கை கூப்பிக்கொண்டு முன்வந்து பக்தர்களுக்கு அருள் பாலிக்கும் வள்ளல். இம்மூர்த்தியினுடைய வழி பாட்டால் துஷ்டக்ரஹ நிவர்த்தி ஏற்படும். இவரது பெரு மையை ராமாயணத்தில் காணலாம்.

## ஸ்ரீ கோவிந்தராஜர்

ஸ்ரீமான் க்ஷீரார்ணவாந்த பணிபதிசயனே சந்த்ரகண்டாதி
கௌரே
பூமாநீலா ஸமேத ஸகலபுவன ஸம்ரக்ஷணோபாய சிந்தாம்
நித்ராவ்யாஜே நகுரவன் நிரவதிமஹிமா நித்ய முக்தாபி
வந்த்ய:
சேதே கோவிந்தராஜ: பிரதிசது ஸுதராம் ஸந்ததம்
மங்களம்ந: ||

ஏழு தலை ஆதிசேஷ சயனத்தில் நீலா, பூமிதேவியுடன் கூடிக்கொண்டு நாபி கமலத்தில் பிரம்மாவைத் தாங்கிக் கொண்டு நீலமேக சியாமள விக்ரஹராய் யோக நித்திரை யில் ஈடுபட்டவராய் அருள்பாலிக்கும் முகத்தினராய் காணப் படுகின்றார். இவருக்கு முன்புறத்தில் த்வாரபாலகர்கள் கம்பிரமாகக் காட்சியளிக்கின்றனர். இவருக்கு அருகே பார்த்தசாரதி, ஆண்டாள், ருக்மிணி, சத்யபாமா, சித்ரகூடத் துள்ளான், ஸ்ரீதேவி, பூதேவி இவ்விருவருடன் கூடிய ஸ்ரீநி வாஸன், ஆகிய அழகிய மூர்த்திகள் காணப்படுகின்றனர். நம்மாழ்வார், குலசேகரர், திருமங்கை ஆழ்வார், ராமானுஜர், மணவாள மாமுனிகள், ஹனுமார் முதலிய உற்சவ விக்ரஹங் களும் காணக் கிடக்கின்றன. வால்கலி என்ற அசுரனை ஜெயிப்பதற்காக சிக்ரசித்திப்ரதமான இந்தத் தில்வாரண்யத் தில் தேவேந்திரன் தவம் செய்துகொண்டு இருக்கும்போது அவனது ப்ரார்த்தனைக்கு இணங்கி கோவிந்தராஜர் இவ்விடத்

தில் வசிப்பதாகவும் ஸ்ரீமந் நடராஜமூர்த்தியின் ஆனந்த தாண்டவத்தை இடைவிடாமல் தரிசிப்பதற்காக இவ்விடத்திலேயே நிரந்தர வாசம் செய்வதாகவும் சிதம்பர புராணங்கள் கூறுகின்றன.

## ஸ்ரீ ராம பாதுகை

ராமபாத ஸஹதர்ம சாரிணீம் பாதுகாம் நிகில பாதகச்சிதம் |
தாம் அசேஷ ஜகதாம் அதீச்வரீம் பாவயாமி பரதாதி
தேவதாம் ||

ஸ்ரீ கோவிந்தராஜரின் முன்புறத்தில் வைக்கப்பட்டுள்ளதும், சடாரி என்று பெயர் கொண்டதும், பரதனால் பிரசித்தி பெற்றதும், சகல பாபங்களையும் போக்க வல்லதும், சிறந்ததுமான, இந்த ஸ்ரீ ராம பாதுகைகளை வணங்கி வேண்டிய வரங்களை அடைவதற்காகவே இன்றும் பக்தர்களின் சிரசில் இப்பாதுகை வைக்கப்படுவதை காண்கிறோம்.

## ஸ்ரீ ஸித்தி புத்தி விநாயகர்

வாமாங்காரூட வாமோரூவக்ஷோஜா நீத புஷ்கரம் |
விக்னவாரண ஹர்யக்ஷம் விக்னராஜம் உபாஸ்மஹே ||

இது நான்காவதான விக்ஞானமய ப்ராகாரம் ஸ்ரீ நடராஜரை பார்ப்பதற்கு முன் வணங்க வேண்டிய வரசித்திகளையும் புத்தியையும் அளிக்க கூடிய, நடன உருவில் அமைந்த விநாயகர், நடராஜர் மகோற்சவத்தில் இவ்விநாயகரிடம் அநுக்ஞை பெற்ற பிறகே உற்சவ காரியங்கள் துவங்கப்படுகின்றன. காரிய லாபத்தையும், ஞான லாபத்தையும் வேண்டுவோர் இவ் விநாயகரை வழிபட்டு காரிய ஞான லாபங்களை அடைவது திண்ணம்.

# ஶ்ரீ லிங்கோத்பவர்

பார்ச்வயோ: ப்ரஹ்ம விஷ்ணுப்யாம் ஸ்த்ரீரூபாப்யாம் சிவாக்ஞயா |
ஸம்ஸேவிதம் மஹேசானம் லிங்கோத்பவம் அஹம்பஜே ||

பிரம்மாவும் விஷ்ணுவும் நானே முதல்வன் என்று வாதம் செய்து போரில் இறங்கிய சமயம் அங்கு ஒரு ஜோதி வடிவம் வானளாவி நிற்கக்கண்டு அவ்விருவரும் திகைக்க அப்பொழுது ஓர் அசரீரிவாக்கு எழும்பியது. "ஏ சிறுவர்களே உங்கள் வல்லமையைச் சோதிக்கக் கருதி சிவபெருமானே ஜோதி வடிவாய் எழுந்தருளியுள்ளார். இதன் அடி முடிகளை அறியுங்கள்" என்று. இதனைக் கேட்டவுடனே கோபமொழிந்தும் அகந்தை நீங்காதவர்களாய் "இதன் முடியையும் அடியையும் தேடுவோம். அவற்றில் ஒன்றைக் கண்டவரே முதல்வர்" எனச் சபதம் செய்து பிரம்மா "யான் முடியைக் காணபேன்" என்றும் விஷ்ணு "யான் அடியைக் காண்பேன்" என்றும் தீர்மானம் செய்து கொண்டனர். விஷ்ணு வராக உருக்கொண்டு பூமியைத் தோண்டி அதலம், விதலம், சுதலம் நிதலம், தராதலம், ரசாதலம், பாதாளம், என்னும் ஏழு லோகங்களிலும் தேடிச் சென்றும் அடியைக் காணமல் சோர்ந்து மேலே வந்துவிட்டார். பிரம்மா அன்னப் பறவை வடிவேற்று பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜன லோகம், தபோலோகம், மகரலோகம், சத்யலோகம் என்னும் மேல் ஏழு உலகங்களிலும் தேடியும் முடியைக் காணமல் களைத்துத் திரும்பினர். இவ்விருவரும் அகந்தை நீங்கி அச்சோதி வடிவத்தை அருள்பாலிக்கவேண்டி வழிப்பட்டனர். தயாநிதியான பகவான் மனமிரங்கி அவர்கள் பிழையைப் பொறுத்து அவர்கள் அகந்தையை நீக்க அவர்களைப் பெண்களாக்கி திருமாலை இடப்புறத்திலும் பிரம்மனை வலப் புறத்திலும் வைத்துக்கொண்டு அருள்பாலித்தார். இவ்விதிகாசத்தை விளக்குவதே இம்மூர்த்தியின் தத்துவம். லிங்கத்தினிடத்தில் சிவனது தோற்றத்தையும் இடப்புறத்தில் பெண்

ணுருக் கொண்ட திருமாலேயும். வலப்புறத்தில் பெண்ணுருக் கொண்ட பிரம்மனேயும் காண்கிறோம். இம்மூர்த்தியை சிவராத்திரியில் வழிபடுவது விசேஷமாகும். இவரது அருளால் காமக், குரோத, லோப, மோக, மத, மாத்ஸர்யங்கள் நீங்கும் என்பது அறிஞர்களின் கொள்கை.

## ஸ்ரீ ஷடானன மூர்த்தி

வந்தே சிந்தூர காந்திம் சரவிபின பவம் ஸ்ரீமயூராதிரூடம்
ஷட்வக்த்ரம் தேவஸேனு மதுரிபுதனுயா வல்லபம்
த்வாதசாக்ஷம்
சக்திம் பாணம் க்ருபாணம் த்வஜமபிகதாம்சாபயம்
தக்ஷஹஸ்தை:
சாபம் வஜ்ரம் ஸரோஜம் கடகமபிபரம் சூலம்
அன்யைர்ததானம் |

ஸ்ரீ சுப்ரமண்யமூர்த்தி ஆறு அழகிய முகங்களோடும் (சத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம், சதாசிவம்) வள்ளி, தேவயானேகளோடும் பன்னிரு தோள்களுடனும், ஈருறு கண்களுடனும் அன்பர்களுக்கு வேண்டிய வரங்களே வாரி வழங்கிக்கொண்டு விளங்கும் கருணமூர்த்தி. இவரது வழிபாட்டால் நாம் சகல லாபங்களேயும் அடைவோமாக! இடதுபுறத்தில் தேவஸேனேயும், வலதுபுறத்தில் வள்ளியும் உள்ளனர்.

## பள்ளியறை
## ஸ்ரீ சிவபோகஸுந்தரி

சிவபோக ஸுந்தரி நமஸ்தே த்ரிணயநவாமாங்கவாஸினி
நமஸ்தே |
சிவகாம ஸுந்தரி நம நதஜன கைவல்யதாயினி நமஸ்தே ||

அர்த்த ஜாம காலத்தில் சித்ஸபையிலிருந்து சிவாம்சமான சிவரத்ன பாதுகைகளே தங்கப் பல்லக்கில் எழுந்தருளச்

செய்து பிராகார பவனியாக வந்து இவ்வழகிய பள்ளியறையில் உள்ள ஊஞ்சலில் அமர்த்தி அம்பாளுடன் சேர்த்து பூஜைகள் நடத்தப்படுகின்றன. காலையில் பால் நைவேத்திய காலத்தில் சிவரத்தின பாதுகைகளைத் தங்கப் பல்லக்கில் வைத்து பிராகார வலமாக வந்து சித்ஸபையில் வைத்து பூஜைகள் நடத்தப்படுகின்றன. வெள்ளிக்கிழமைகளில் மனோமய பிராகார பவனி வருவது விசேஷம். ஆடி வெள்ளிக்கிழமைகளில் இவ்வம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன. இவ்வம்பாளுக்கும் சிவரத்ன பாதுகைக்கும் சிறந்த மாலை சார்த்தி திரட்டிப் பாலென்னும் சிறந்த நைவேத்யம் செய்து வழிபட்டால் சீக்கிர விவாகப் ப்ராப்தி ஏற்படும் என்று பெரியோர்கள் கூறுவர்.

## ஸ்ரீ ஆகாசலிங்கம்

ப்ரபன்ன ஜனஸந்தோஹ ஸர்வகல்யாண தாயகம் |
ஆகாசலிங்கம் வந்தேஹம் ஆதிவ்யாதி ப்ரணாசகம் ||

பள்ளியறைக்கு மேல்மண்டபத்தில் இருக்கும் இந்த லிங்கம் சிதம்பர க்ஷேத்ரம் ஆகாசக்ஷேத்ரம் என்பதை எண்பித்துக்கொண்டு விளங்குகிறது. தினம் வழிபாடு நடைபெறுகிறது.

## ஸ்ரீ ஜைமினி

வியாஸ சிஷ்யம் ஜைமினிம்தம் கர்மகாண்ட ப்ரவர்த்தகம் |
சிதம்பர நடேசான தர்சனேதத் பரம்நும: ||
சிதம்பர புரோத்பன்னம் விசிஷ்டாகர்ப சம்பவம் |
சங்கரம் சங்கராசார்யம் ஸ்வயம்பூதம் ஸதா நும: ||

வியாஸருடைய சிஷ்யரும் கர்மமீமாஸா ப்ரவர்த்தகரும் வியாசர் உபதேசத்தால் சிதம்பரம்வந்து நடராஜரை சேவித்து முத்தியடைந்தவரும் இஜ்ஜைமினி ஆவர். கேழ்சுவரில்

ஜைமினி, வ்யாக்ரபாத பதஞ்ஜலிகளின் அழகிய உருவங்களைக் காணலாம். ஸ்ரீ நடராஜருடைய பின்புறமிருந்து ஸேவிப்ப தாக ஐதிஹ்யம்

## ஸ்ரீ பிக்ஷாடனர்

ப்ரஹ்மாண்ட ஸ்தித பூத ஜாத ஹ்ருதய ப்ரொத்யந்தி
காமாணிஅஹோ |
ய:பூர்வம் ஸஹஸா ப்ரபூரயதி பஹூப்ரீத்யா பவானீபதிம் ||
ஸோயம் ஸர்வ வஸுந்தராபதி: அபிஸ்த்ரீப்ய:ச பிக்ஷாடன: |
ஸம்ஜாத: க்ருபயா இதி வைபவயுதம் தேவம்
நமாமோவயம் ||

தேவதாருவனத்தில் மஹரிஷிகள் ஈச்வரனே இல்லை என்றும், வேள்விமுதலிய கர்மாக்களே பயனை அளிக்கின்றன என்றும் கூறிக்கொண்டு சுத்த கர்மடர்களாய் இருக்கும் நிலையைக்கண்டு வருந்தி தயாநிதியான பகவான் ஸ்ரீ நடராஜ மூர்த்தி கருணைகொண்டு அவர்களுக்கு அருள்பாலிக்க கருதி விஷ்ணுவை அழைத்து மிக அழகிய மோஹிக்கச் செய்யக் கூடிய பெண்வடிவம் தாங்கச் செய்து அழைத்துக்கொண்டு தாருகாவனம் சென்று, தாம் சுந்தர நக்ன பிக்ஷாடன உருவம் கொண்டு கையில் கபாலமேந்தி ஆச்ரம வாசிகளின் வீடு தோறும் பிக்ஷை எடுக்க இவ்வழகிய பிக்ஷாடனரைக் கண்டு ரிஷபத்தினிகளும் பிக்ஷை அளிக்க வந்து இவரது உருவத்தில் மயங்கி தன்வசம் இழந்து அவருடன் பின் செல்ல ஆரம்பித்து தன்னையே மணக்கவேண்டும் என்றும் வேண்ட ஆரம்பித்து விட்டனர். மோஹினி உருக்கொண்ட விஷ்ணுவோ எனில் வேள்வி செய்யும் யாகசாலையில் சென்று அங்குள்ள இளம் வயதுள்ள முனிவர்களை கண்டாள், கண்டமாத்திரத்தில் அவர்கள் இம்மோஹினியுடன் பின் செல்ல ஆரம்பித்து விட்டனர். இவ்வாறிருக்க கிழ முனிவர்கள் இந்நிலையை ஞானக்கண்ணால் அறிந்து பிக்ஷாடனரை நோக்கி ஆபிசாரகர் மாவை துவக்கி விட்டனர். அதிலிருந்து வெளிவந்த புலியை

யும், யானையையும் கிழித்து ஆடையாக அணிந்து கொண்டார் பிக்ஷாடனர். பாம்புகளை அணியாகவும், வேதமந்திரங்களை பாதசரமாகவும், முயலகன் என்றும் அபஸ்மாரத்தை காலில் வீழ்த்தி நெருப்பை கையில் ஏந்தி அவ்வேள்வியை பயனற்றதாக ஆக்கி அம்முனிவர்களுக்கு காட்சி கொடுத்துக்கொண்டு நர்த்தனம் செய்து கொண்டு அருள் பாலித்தார் என்பது புரான வரலாறு. இம்மூர்த்திக்கு வலது புறத்தில் வியாக்ரபாதரும் இடதுபுறத்தில் பதஞ்சலியும் காணப்படுகின்றனர். இங்கு பதஞ்சலி நான்கு கைகளுடனும் ஐந்து தலைநாகத்துடனும் புருஷ வடிவத்தில் காணப்படுவது விசேஷமாகும். இந்த பிக்ஷாடனருக்கும் மோகினி உருவம் தாங்கிய விஷ்ணுவிற்கும் பிறந்தவரே சாஸ்தா ஐயனர் எனப்படுவார்.

## ஸ்ரீ க்ஷேத்ரபாலகர்

நீலருசி வேதகர வன்ஙிநயனம் ஸ்யாத், ச, சூலக கபால
டமரும் ச ஸஹபாசம் |
நக்ன சுன வாஹன ஸகிங்கிணி விபூஷம் ப்ரோச்ச கதிகேச
தர ஸர்ப்வரஹாரம் ||

க்ஷேத்ரமாகிய உலகிற்கு ஊழிக் காலத்தில் ஏற்பட்ட துன்பத்தைப் போக்கி காத்து அருளியதால் உமையுருபாகனுக்கு க்ஷேத்ரபாலகர் என்று திருநாமம் ஏற்பட்டது என்று ஒரு புரான வரலாறு பெண்ணினல் மட்டும் கொல்லத்தகுந்த தாருகாசுரனல் துன்புறுத்தப்பட்ட பிரம்மா முதலிய தேவர்கள் சிவனை வேண்டினர் துன்பம் நீங்க. பிறகு சிவனும் தனது அம்சத்தால் காளியைத் தோற்றுவித்தார். அக்காளி தாருகாசுரனை கொன்முள் பிறகு அவளுடைய கோபத்தீயால் எல்லா உலகமும் வருந்தியது. அதைக்கண்டு சிவன் மாயையால் பால உருக்கொண்டு அக்காளியினுடையக் கோபத்தீயை பருகுவதற்கு இடுகாட்டில் அழுதார். அழும் அக்குழந்தையை காளி கண்டு கையிலேந்தி மார்புடன் அணைத்துக்

கொண்டு ஸ்தன்யப்பாலைக் கொடுத்தாள். அப்பாலுடன் கூட அவளுடையக் கோபத்தீயையும் அக்குழந்தை பருகி விட்டது. அவரேதான் க்ஷேத்ரபாலகர் என்றும் சிவாவ தாரங்களில் ஒன்றென்றும் லிங்க புராண வரலாறு கூறுகின் றது. இவருக்கு அஷ்டமி தினங்களில் விசேஷ வழிபாடுகள் நடைபெறுகின்றன. நெய்யினால் தயாரிக்கப்பட்ட வடை மாலையையும் பக்தர்கள் பிரார்த்தனைக்காக இம்மூர்த்திக்கு சாற்றுகின்றனர்.

இம்மூர்த்திக்கு பக்கத்தில் சந்திர சூரியர்களும் தனித்து மேற்கு நோக்கி அமர்ந்துள்ளனர். தேவாரம் இயற்றிய அப்பர் (திருநாவுக்கரசர்), சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர் களின் உருவங்களும் தனித்து வடக்கு நோக்கிக் காணப்படு கின்றன.

## ஸ்ரீ பரமானந்த கூபம்

இந்தக் கூபமானது (கிணறு) பார்வதியினுடைய பார்வையால் அமைக்கப்பட்டது. இந்நீராலேயே ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கும் ஸ்ரீ சந்திரமௌளீச்வரருக்கும் ஸ்ரீ ரத்தினசபா பதி மூர்த்திக்கும் மற்றும் ஏனைய மூர்த்திகளுக்கும் அபிஷே கம் நடைபெறுகிறது. ஐப்பசி மாத சுக்ல நவமியிலும் (அன்று கங்காதேவி இங்கு வருவதாக ஐதிஹயம்) தை மாத அமாவாசையிலும் (அன்று பத்து தீர்த்தங்களில் இறுதி தீர்த்தமாக இங்கு தீர்த்தோற்சவம் நடைபெறுகிறது) மற்றும் ஏனைய புண்ய தினங்களிலும் பக்தர்கள் இந்த தீர்த்தத்தில் நீராடுகின்றனர். மிக அழகானது இக்கிணறு வெண்மையும் சுவையுமுள்ள நீருடன் கூடியது என்றும் வற்றாதது. இதனது புரோக்ஷன ப்ராசன மாத்ரத்தால் சகல பாவங்களும் பிணிகளும் நீங்குகின்றன என்று பெரி யோர்கள் கூறுகின்றனர்.

## ஸ்ரீ கனகசபை

இது ஸ்ரீமந் நடராஜமூர்த்தியின் சன்னிதானம் நாம் தரிசனம் செய்து கொண்டு நிற்குமிடம் கனகசபை. இதன் மேற்கு பக்கத்தில் வியாக்ரபாத மஹரிஷியும் அதற்கு மேலே தண்டி என்ற ரிஷியும் கீழ்புறத்தில் பதஞ்சலி மஹரிஷீயும் அதற்கு மேலே முண்டி என்ற ரிஷியும் நடராஜருக்கெதிரில் நந்திகேசுவரரும் காணப்படுகின்றனர். இவரை வழிப்பட்டு இவர்களது பெருமைகளைத் தெரிந்து கொண்டு கனகசபை யின் தத்துவத்தை பின் ஆராய்வோம்.

## ஸ்ரீ வியாக்ரபாதர்

மத்யந்தினஸுதம் சாந்தம் வஸிஷ்ட பகினிபதிம் |
உபமன்யோச்ச பிதரம் வ்யாக்ரபாதம் நமாம்யஹம் ||

மத்யந்தின முனிவர் தம்முடையக் குமாரருக்கு சிவ புண்யங்க ளெல்லாவற்றுள்ளுஞ் சிறந்தது சிவலிங்க ஆரா தனம் என்றும், சிவஸ்தலம் எல்லாவற்றிலும் சிறந்தது சிதம்பரம் என்றும் உபதேசித்தார். அதுகேட்ட குமாரர் பிதாவினுடைய அனுமதி பெற்றுக்கொண்டு தெற்குநோக்கி சென்று தில்லைவனத்தை யடைந்து அதன்உள்ளே சிவகங்கை யென்னும் சிவதீர்த்தத்தையும் அதற்குத் தெற்கே ஒரு ஆல மர நிழலிலே ஸ்ரீ மூலஸ்தானேச்வரர் என்னும் சிவலிங்கத் தையும் தரிசித்து தினந்தோறும் அத்தீர்த்தத்திலே ஸ்நானம் செய்து ஸ்ரீ மூலஸ்தானேச்வரரைப் பூஜை செய்துகொண்டு வந்தார். சிலநாட்களானபின்பு மேற்கே ஒரு திருக்குளத்தை கண்டு அதற்கு மேற்கே ஒரு சிவலிங்கத்தை ஸ்தாபித்து அதற்கு ஸமீபத்திலே ஓர் பர்ணசாலையில் இருந்துகொண்டு இருசிவலிங்கங்களையும் பூஜை செய்துகொண்டிருந்தார். ஓர் நாள் விடியுமுன் பனியிலே வழுக்காமல் மரங்களிலேறி புழு இல்லாத புஷ்பங்களை எடுப்பதற்காக ஸ்ரீ மூலஸ்தானநாத ருடைய அருளால் புலிக்கால் கைகளைப்போல் வலிமை

யுடைய கால்களையும் அதில் கண்களையுமடைந்து அன்று முதல் வியாக்ரபாதரென்னும் பெயருடையவராகி வேத விதிப்படி சிவபூஜை செய்து கொண்டு எண்ணில்லாத கால மிருந்தார். அப்பொழுது பிதாவாகிய மத்யந்தன முனிவர் வந்து வியாக்ரபாத முனிவரைக் கண்டு மகிழ்ந்தார். பிதா வின் உத்திரவுப்படி வியாக்ரபாதர் வசிஷ்ட முனிவருடைய தங்கையாரை விவாகஞ் செய்து கொண்டு உபமன்யு என்னும் ஒருசத்புத்திரரைப் பெற்றார். இப்புத்திரரை வசிஷ்ட மஹரிஷியின் மனைவியாகிய அருந்ததிதேவி தம்முடைய ஆச்ரமத்துக்கு கொண்டு போய் காமதேனுவினது பாலை ஊட்டி வளர்க்கும் நாளிலே வியாக்ரபாத முனிவர் தமது பர்ணசாலையிலே அப்புத்திரரைக் கொண்டு வந்து கிழங்கு பழம் முதலியவற்றையும் கரைத்த மாவையும் கொடுக்க அவைகளை உட்கொள்ளாது காமதேனுவின் பாலை விரும்பி அழுகிற அப்புத்திரரை ஸ்ரீ மூலஸ்தானேச்வரர் ஸந்நிதியிலே கொண்டுவிட அவர் பசி மிகுதியால் அழுது பரமேச்வரரு டைய க்ருபையால் திருப்பாற்கடலைப் பெற்று பருகி வளர்ந் தார். உபமன்யு முனிவர் இந்த க்ஷீரபான விசேஷத்தால்தான் ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு சிவபாரம்யத்தை உபதேசித்தார். ஸ்ரீ கிருஷ்ண பகவானும் அர்ஜுனனுக்கு கீதை மூலமாக இவ் வுபதேசஸாரத்தையே உபதேசித்தருளினார். ஒருநாள் வியாக்ர பாத முனிவர் யோக மஹிமையால் தேவதாருவனத்தில் நாற்பத்தெண்ணாயிர முனிவர்களுக்கு ஸ்ரீ நடேச பெருமான் திருநிருத்தஞ் செய்தருள் செய்ததை அறிந்து அதனை தரிசித் தருளும்படி ஸ்ரீ மூலஸ்தானேச்வரரை உபாஸித்து அம் மூர்த்தியின் கிருபையால் தைப்பூசம் வியாழக்கிழமையோடு கூடிய சித்தயோக தினத்து மத்யானத்திலே பதஞ்சலி முனி வரோடும் த்ரிஸஹஸ்ர முனிவர்களோடும் பிரமன் முதலான தேவரிஷி கணங்களோடும் திவ்யநிருத்த தர்சனஞ்செய்து

ஜன்ம ஸாபல்ய மடைந்தார். இதன் விரிவை சிதம்பர மஹாத்மியத்தில் காணலாம்.

## ஸ்ரீ தண்டி

நடேச தக்ஷிணே பார்ச்வேஸ்திதம் பக்தவரம் ரிஷிம் |
சிவஸேவாம் ப்ரகுர்வந்தம் தண்டினம் ப்ரணமாமி அஹம் ||

இவர் மஹரிஷிகளில் ஒருவர் ஸ்ரீ நடராஜ சேவைக்காக வ்யாக்ரபாதர் அருகிலேயே இருந்துகொண்டு காட்சி அளிக்கிறார்.

## ஸ்ரீ பதஞ்சலி

யோகேந சித்தஸ்ய பதேநவாசாம் மலம் சரீரஸ்யச
வைத்யகேந |
ய:அ பாகரோத்தம் ப்ரவரம் முநீநாம் பதஞ்ஜலிம் ப்ராஞ்ஜலி:
ஆநதோஸ்மி ||

ஒருநாள் ஸ்ரீ நாராயணர் ஆதிசேஷ சயனத்தின்மீது செய்யும் நித்திரையை விட்டெழுந்து சிவானந்த பரவசராய் இருக்கும் சமயம் ஆதிசேஷர் பாரந்தாங்காமல் திகைத்து அவரை வணங்கி ஓ நாதனே! தாங்கள் அடியேன்மீது முன் போல் சயனித்து விழியாது இப்படி எழுந்தருளியிருந்தமை என்னே? என்று வினவ விஷ்ணு சொல்வாராயினர். ஆதிசேஷனே! நேற்று சிவபெருமான் தாம் பிக்ஷாடன வடிவங் கொண்டு என்னை மோகினிவடிவங் கொள்வித்து என்னுடு தேவதாரு வனத்திற்குசென்று பிக்ஷை ஏற்பாராயினர். அங்குள்ள முனிவர்கள் என்னைக்கண்டு மோகிக்க அவர்களுடைய பத்னிகள் பிக்ஷாடனரைக் கண்டு மோஹித்தார்கள். அதை யறிந்த முனிவர்கள் சினங்கொண்டு ஆபிசார ஹோமம் செய்தார்கள். சிவபெருமான் அக்குண்டத்து அக்கினியினின்றும் தோன்றிவந்த புலியைபிடித்து கிழித்து தோலை உடுத்திக்கொண்டார். பின்பு வந்த பூதங்களை அடிமையாக்கிக் கொண்டார். பின்பு வந்த சர்பத்தை அணியாக அணிந்து

கொண்டார். பின்பு வந்த முயலகனை முதுகு நெறியும்படி வலப் பாதத்தினாலே மிதித்துக்கொண்டார். பின்பு வந்த் அக்னியை இடது கையில் ஏந்திக் கொண்டார். பின்புவந்த மந்திரங்களை திருவடியிலே திருச்சிலம்புகளாக அணிந்துகொண்டார். பின்பு அம்முனிவர்களை அநுகிரகிக்க சிவபெருமான் ஆனந்த நிருத்தம் செய்தருளினார். அந்த நிருத்தாந்தத்தினாலே நித்திரையை ஒழித்தேன். அந்த ஆனந்த பாரத்தால் உனக்கும் சுமை ஏறிவிட்டது என்றருளினார். இவ்வார்த்தையை ஆதிசேஷர் கேட்டு நிருத்த தரிசனத்தில் பேராசை யுடையவராய் விஷ்ணுவிடம் அநுமதி பெற்றுக்கொண்டு திருக்கைலாய மலையை அடைந்து பல காலம் தவம் செய்தார். ஒருசமயம் பரமேச்வரன் ப்ரத்யக்ஷமாகி அன்பனே! சிருஷ்டி. ஸ்திதி, சம்ஹாரம், திரோதானம் அநுக்ரஹம் ஆகிய பஞ்ச கிருத்யமே நமது நிருத்தமாகும். நாம் தேவதாரு வனத்திலே நிருத்தப்ரஸ்தாவனை மாத்ரம் செய்தபோது அவ்வனம் அதனை பொறுக்கமாட்டாது அசைந்தது. நமது நிருத்தத்தை தாங்கவல்லது தில்லைவனம். அந்த ஸ்தலத்திலே ஸ்ரீ மூலலிங்கம் இருக்கின்றது. அதற்கு தெற்கே ஓருஸபை உண்டு. அங்கே நாம் எக்காலமும் நிருத்தம் செய்தருள்வோம். புண்யவான்களான த்ரிஸஹஸ்ர முனிவர்கள் வேதங்களால் ஸ்துதிக்கத் தகுந்த அச்சபையையும் நிருத்தத்தையும் தரிசிக்கிறார்கள். புண்யபாகம் இல்லாதவர்களுக்கு தோன்றாது நீ அங்கே இவ்வடிவத்தோடு போவாயாயின் உலகம் பயப்படும். நெடுங்காலத்துக்குமுன் அத்ரி முனிவனும் அவன் பத்னியாகிய அனசூயையும் உன்னைப் பிள்ளையாகப்பெற விரும்பி தவம் செய்தார்கள்.

அவ்வனசூயை ஸ்நானம் செய்து கரை ஏறியபோது நீ அவளுடைய அஞ்சலியிலே ஐந்து தலைபொருந்திய ஒரு சிறு பாம்பாய் பொருந்த அவள் பயத்தினாலே கைவிட நீ வீழ்ந்து பதஞ்சலி என்னும் பெயர் பெற்றாய். இப்பொழுது நீ அவ் வடிவமும் அப்பெயரும் கொண்டு நாகலோகத்துக்கு போ

அங்கே ஒரு பர்வதமும் ஒரு பிலத்வாரமும் உள்ளன. அப் பிலத்வாரத்தின் முடிவு தில்லைவனம். ஓர் ஆலமர நிழலிலே அப்பருவதத்தின் கொழுந்து மூல லி ங க மா ய் இருக்கும் வ்யாக்ரபாத முனிவன் நமது நிருத்தத்தைத் தரிசிக்க விரும்பி அந்த லிங்கத்தை பூஜை செய்து கொண்டிருக்கிறுன். நீயும் போய் அவனோடு இரு. குரு வாரத்தோடும் சித்தயோகத் தோடும் கூடிய தை மாத பூச தினத்து மத்தியானத்திலே ஆனந்த நிருத்தம் காட்டி அருள்புரிவோம்! அதை நீ தரிசித்து சப்த சாஸ்திரத்திற்கு பாஷ்யம் செய் என அருள் செய்தார். அப்படியே பதஞ்சலி முனிவர் தி ல் லை வ ன ம் வந்து ஸ்ரீ வியாக்ரபாத முனிவரோடு ஸ்ரீ மூலஸ்தானநாதரை பூஜை செய்து கொண்டும் தில்லைவனத்தின் மேற்புறத்தில் ஒரு திருக் குளத்தைக் கண்டு அதன் கீழ்க்கரையில் ஒரு சிவலிங்கத்தை ஸ்தாபித்து பூஜை செய்து கொண்டும் திருக்குளத்தின் வட பாகத்திலே பர்ணசாலை அமைத்துக்கொண்டு இருந்து வந்தார் பின் சிவபெருமானுல் குறிக்கப்பட்ட தைப்பூச தினத்திலே ஸ்ரீ சித்ஸபேசருடைய ஆனந்த நிருத்த தரிசனஞ் செய்து சிதம்பர சித்ஸபையிலே "இன்று முதல் எக்காலமும் சகல ப்ராணிகளுக்கும் ஆனந்த நிருத்தத்தை காண்பித்து அருளும்" என்று பிரார்த்திக்க சிவபெருமானும் அவ்வாறே அங்கீகரித் தருளினுர். பின் வியாகரண ம ஹா பா ஷ் ய த் தை யும், ஸ்ரீ சித்ஸபேசருடைய நித்ய நைமித்திக உத்சவ பூஜாவிதி சூத்ரங்களையும் யோக சூத்ரங்களையும் வைத்ய சா ஸ் தி ர வார்த்திகங்களையும் செய்து அநேக மஹரிஷிகளுக்கு அத்யா பனம் செய்து கொண்டும் ஆனந்த நிருத்தம் செய்து கொண் டும் பரமானந்த பரிதராய் ஸ்ரீ நடேசரின் இடது புறத்திலேயே இருந்தார். இச்சரித்திரத்தின் விரிவை சிதம்பர மஹாத்மியத் திலும் ராமபத்ர தீக்ஷிதக்ருத பதஞ்சலி சரித காவியத்திலும் காண்க!

## ஸ்ரீ முண்டி

நடேச வாம பார்ச்வேது ஸமஸ்திதம் முனிபுங்கவம் |
பதஞ்சலி ஸமேதம் சமுண்டினம் ப்ரணமாமி அஹம் ||

நடேசருடைய இடது புறத்தில் பதஞ்சலிக்கு மேல்பாகத்தில் அமர்ந்திருக்கும் முண்டி என்ற மஹரிஷியாவார்.

## ஸ்ரீ நந்திகேச்வரர்

நந்திகேசம் மகாபாகம் சிவத்யான பராயணம் |
அஷ்டமூர்த்தே: அதிஷ்டானம் தர்மரூபம் நமாமி அஹம் ||

இவர் அபரபரமேச்வரர் எனப்படுவர். சிவகணங்களுக்குத் தலைவர். தர்மரூபி. சிவனுக்கு வாகனமாகவும் கொடியாகவும் விளங்குபவர். கையில் பிரம்பை வைத்துக் கொண்டு சிவகணங்களை அடக்குபவர். இவருடைய அநுமதியின் பேரிலேயே சிவதரிசனத்திற்கு செல்லவேண்டும் என்பது சாஸ்திர சித்தாந்தம். அதனாலேயே ராவணன் ஒருசமயம் சிவசேவைக்காக கைலாசம் சென்றிருந்தபோது இவரை குரங்கு மூஞ்சி என்று அவமதித்ததின் பயனாக இவரது சாபத்தால் குரங்காலேயே மரணமடைய நேர்ந்தது என்பது புராணப் பிரசித்தம். சைவ சித்தாந்திகள் சிவனைப் பதியாகவும், நந்தியை பசுவாகவும், பலிபீடத்தை பாசமாகவும் கூறுவர். அத்வைத சித்தாந்திகளோ எனில் நடராஜரை பரமாத்மாவாகவும், நந்திகேசுவரரை ஜீவாத்மாவாகவும், பலிபீடத்தை மாயையாகவும் கூறுவர். ஆகையால் இவரது அநுமதிபெற்று ஸ்ரீ நடராஜ சேவைக்குச் செல்லவேண்டும். இவருக்கு பிரதோஷ காலங்களில் விசேஷ ஆராதனையும், வெள்ளிக் கவசமும் சார்த்தி தனிவழிபாடு நடத்தப்படுகிறது. வெயில் காலங்களில் மழையில்லாமல் வரட்சிநிலை யேற்பட்டால் இம்மூர்த்திக்கு நூறுகுடம் தீர்த்தாபிஷேகம். பாலபிஷேகம் முதலியன நடத்தினால் அத்தாபம் நீங்கும் என்பது சான்றோர்களின் கொள்கை. ஆகையாலேயே ஈச்வரனுக்கு பல வாகனங்களிருப்பினும் ரிஷப வாகனத்திலேயே ஏறிக் கொண்டு பக்தர்களுக்கு காட்சி கொடுத்தார் என்பது பல புராணங்களில் தெளிவு.

## ஸ்ரீ கனகசபை

ஐந்து சபைகளில் ஒன்று விஞ்ஞானமய கோசம் என கூறப்படும். பெயரளவில் கனகசபையே தவிர தற்பொழுது செப்புத்தகடுகளாலேயே மறைக்கப்பட்டுள்ள கூரையோடு கூடிய சபை முன்காலத்தில் தங்கமாக புண்யாத்மாக்களுக்கு தோன்றியதால் இப்பெயரை அடைந்தது என்பதாக பெரியோர் கூறுவர். தற்பொழுதும் இதை சொர்ணமாகவே பாவிப்போரும் பலர் உளர். செப்பும் சொர்ணத்தின் அம்சமாகையால் செப்பையும் சொர்ணமென்று புகழ்வது தவறன்று என்று சொல்வோர் சிலர் தீயதும் நல்லதாகவே தோன்றும் பெரியோர்களுக்கு என்பதற்கு இது எடுத்துக் காட்டு. இங்கு நின்று கொண்டேதான் நாம் நடராஜரை வழிபடுகிறோம். இந்த சபையானது தத்துவங்கள் நிறைந்தது இங்குள்ள பதினெட்டு ஸ்தம்பங்களும் பதினெட்டு புராணங்களாகக் கருதப்படுகின்றன. கீழே உள்ள ஐந்து தலவரிசை பெரிய கற்களும் பஞ்ச பூதங்களாக (நிலம், நீர், அனல், வளி வான்) கூறப்படுகின்றன. இதற்கு வாசல் நேர்ப்புறம் அமையாமல் கிழக்கு, மேற்கு இருபுறங்களிலும் அமைந்திருப்பதானது இச்க்ஷேத்திரத்தை விராட் புருஷனுடைய இதய ஸ்தானமாக கூறுவதற்கு பொருத்தமாயுள்ளது. எவ்வாறு இதயத்தினுடைய வாயில் நேர்ப்புறமில்லாமல் இருபுறங்களிலுமே அமைந்துள்ளதோ அதுபோல் மேலும் இதற்கு வெளி வாயிற்புறங்கள் 9 அமைந்துள்ளன. அவை சரீரத்தின் ஒன்பது துவாரங்களாகக் கருதப்படுகின்றன. நேர்புறக் கதவும் இரு புதுமுக கதவுகளும் வெள்ளித் தகடுகளாலும் மற்றேனைய வெளிக்கதவுகள் பித்தளைத் தகடுகளாலும் மறைக்கப்பட்டுள்ளன.

மேலேயுள்ள மச்சும் பல பூவேலைப்பாடுகள் அமைந்ததாகவும், அழகிய கண்ணாடி குலோபர்கள் நிறைந்தும் அழகாகக் காட்சியளிக்கிறது. இதற்கு வர்ணம் தீட்டுவதில்லை. சில வருடங்கட்கு ஒருமுறை சந்தனக்காப்பு அடிக்கப்படுகிறது

இத்தகைய பெருமை வாய்ந்த இந்த சபையில்தான் ஸ்ரீ நடராஜமூர்த்திக்கும் ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாளுக்கும் மகாபிஷேகங்கள் நடைபெறுகின்றன. (சித்திரையில் திருவோணம், ஆவணியில் சுக்ல சதுர்த்தசி, புரட்டாசியில் சுக்ல சதுர்த்தசி, மாசி சுக்ல சதுர்த்தசி) இங்குதான் ஸன்னிதானத்தில் பாவாடை என்னும் மகாநைவேத்தியம் (ஐந்து கலம் அரிசியால் தயார் செய்யப்படுவது) அடிக்கடி பக்தர்களால் ப்ரார்த்தனைக்காகச் செய்யப்படுகிறது. தைமாத பூச தினத்தில் சுமார் இருபது கலம் அரிசியாலாக்கப்பட்ட தயிரன்ன மகா நைவேத்தியம் பஞ்ச பூதக் கற்களிலும் பரப்பப்பட்டு மகா நைவேத்தியம் செய்யப்படுகிறது. விசேஷமாக இச் சபையின் கிழ்புறத்தில் காலை ஒன்பது மணிக்கு கால ஸந்தி பூஜைக்காக ஸ்ரீ சந்திரமௌலீச்வரருக்கு அபிஷேகமும் காலை பத்து மணிக்கு இரண்டாவது காலத்தில் சந்திரமௌலீச்வரருக்கும், ரத்தின சபாபதிக்கும் அபிஷேகமும் பதினேரு மணிக்கு சந்திரமௌலீச்வரருக்கு உச்சி கால அபிஷேகமும் சாயங்காலத்தில் ஐந்து மணிக்கு சாயரட்சையிலும் இரவு ஏழு மணிக்கு இரண்டாங் காலத்திலும் இரவு ஒன்பது மணிக்கு அர்த்தஜாம காலத்திலும் தீபாவளியன்று காலை 6 மணிக்கும் மார்கழி மாத திருபக்ஷியில் 30 நாளும் விடியற்காலை 4 மணிக்கும் மஹா சிவராத்திரியன்று பத்து மணிக்குமேல் ஐந்து மணி வரை தனித்து சிறப்பாக நான்கு காலங்களிலும் சந்திரமௌலீச்வரருக்கு விசேஷ அபிஷேகங்கள் நடைபெறுகின்றன. அப்பொழுது த்ரிவேத பாராயணங்கள் செய்யப்படுகின்றன. சொர்ண கால பைரவருக்கும் மேற்படி காலங்களில் பக்தர்கள் ப்ரார்த்தனைக்காக சிலநாட்களில் அபிஷேகம் இங்குதான் செய்கின்றனர். ஒவ்வொரு காலத்திற்கும் இக்கனகசபையிலிருந்து கொண்டே பூஜைகாரர்கள் ஸ்ரீநடராஜருக்கு ஷோடசோபசார பூஜைகளை மிகச்சிறந்தமுறையில்பதஞ்சலி பகவானல் வகுக்கப்பட்ட பூஜைவிதானப்படி நடத்தி வருகின்றனர். இச்சபையில் தான் பலமன்னர்களுக்கு முடிசூட்டு விழாவும் பல மதாச்சாரியர்களுக்கு தீக்ஷா வைபவமும் அன்றைய பூஜை ஆசாரியரால்

நடத்தி வைக்கப்படுவது வழக்கம். மணமான புதுத்தம்பதிகள் இவ்விடத்திற்கு வந்து ஸ்ரீ நடராஜர் பாதத்தில் சார்த்தி எடுத்த மாலைகளை ஏற்றுக் கொள்வதும் வழக்கமாயுள்ளது. இங்குதான் மாணிக்கவாசகர் ஊமைப் பெண்ணை பேச வைத்தது புராண பிரஸித்தம்.

## ஸ்ரீ சித்ஸபை

ஸபாம் நவாபாம் நடராஜ ராஜ ப்ரஸித்த நாட்யாகம
திவ்ய ரங்கம் |
ஆனந்த நிருத்தஸ்ய விதான பூதாம் ஸ்ரீ சித்ஸபாம்
நித்யமஹம் நமாமி ||

இது ஐந்து சபைகளில் பிரதான சபையாகும் சித் என்பது ஞானம் என்று பொருள்படும் சொல் ஞானத்தை அளிக்க வல்ல வள்ளல் ஸ்ரீ நடராஜரின் இருப்பிடமாதலால் அன்னாருடைய பரமானந்த தாண்டவத்திற்கு ஆதாரமானதால் இதற்கு ஞானசபை என்று பெயர் வாய்ந்தது மிகமிகப் பொறுத்தமானது. ஞானத்தை சொர்ணத்துக்கு நிகராக சாஸ்திரங்கள் கூறுவதால் சொர்ணத்தாலேயே (தங்கம்) இரண்யவர்ம சக்கரவர்த்தி ஓடுகளாக ஆக்கி மேலே இழைத்தனன் என்பது புராண வரலாறு. இதன் புதுமுக வாசலில் ஐந்துபடிகள் உள. அவை ஐந்தும் சிவ பஞ்சாட்சர மூல மந்திரமாகும். மூலமந்திரத்தை உச்சரித்தே பகவானை வழிபட வேண்டும் என்னும் நியதியை வெளியிடவே இவ்வைந்தும் அமைந்துள்ளன. இந்த சபையானது ஆனந்த மயகோசமாகக் கூறப்படுகிறது. இங்கு பிரம்ம, விஷ்ணு, ருத்ர, மஹேச்வர, சதாசிவம் என ஐந்து பீடங்கள் உள்ளன. பிரம்ம பீடம்தான் கனகசபை. விஷ்ணு பீடத்தில் உள்ள கதவு அவித்யை எனப்படும். அதில் கீழ்க்கதவில் விமலன் என்னும் துவாரரட்சகரின் உருவமும் மேற்புறக் கதவில் சுபாஹு என்னும் த்வாரரட்சகரின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது. கவாக்ஷங்கள் (பலகணிகள்) தொண்ணூற்ருறும் தொண்ணூற்ருறு தத்வ

தாத்வீகங்கள், இருபத்தெட்டு தூண்கள், காமிகம் முதலிய இருபத்தெட்டு ஆகமங்கள் ருத்ர பீடத்திலுள்ள ஐந்து ஸ்தம்பங்கள் ப்ருத்வி முதலிய பஞ்ச பூதங்கள், ஈச்வர பீடத்தி லுள்ள ஆறு சொர்ண ஸ்தம்பங்கள் வேதாந்தம் முதலிய ஆறு சாஸ்திரங்கள் சதாசிவ பீடத்தில் உள்ள நான்கு சொர்ண ஸ்தம்பங்கள் ரிக், யஜுர், சாம, அதர்வணம் எனும் நான்கு வேதங்கள். இவைகளுள் அடங்கிய இடத்தை அத்த வித்யை எனவும் ரகசியம் முதல் ஸ்ரீ நடராஜமூர்த்தி வீற்றி ருக்கும் இடம் வரையில் ப்ரணவபீடம் எனவும் கூறப்படும். சித்ஸபையின் விமானத்தின் மேலேயுள்ள ஒன்பது ஸ்வர்ண கும்பங்களும் 1 வாமா, 2 ஜேஷ்டா 3 ரௌத்ரீ 4 காளீ 5 கலவிகரணீ 6 பலவிகரணீ 7 பலம்ப்ரமதினீ 8 சர்வ பூத தமனீ 9 மனோன்மணி என்னும் நவசக்திகள். அவ்விமானத் திலுள்ள அறுபத்திநான்கு கை மரங்களும் கீதம், வாத்யம் முதலிய அறுபத்திநான்கு கலைகள். அதில் பதிக்கப்பட்டுள்ள இருபத்தோராயிரத்து அறுநூறு (21600) தங்கவோடுகளும் மனிதனுல் ஒவ்வொரு தினமும் விடப்படுகின்ற 21600 சுவா சங்களேயும், அதில் அடிக்கப்பட்டுள்ள 72000 ஆணிகளும் சுவாச சஞ்சாரத்திற்கு ஆதாரமான 72000 நாடிகளேயும் குறிக்கின்றன. மேலும் இச் சித்ஸபை ஞான ரூபமானதாலே சொர்ணம் என்கிற பதம் ஞானபர்யாயமாக உபநிஷத்துகளில் சொல்லப்பட்டிருப்பதால் ஞானிகள் ஞான ரூபமான இச் சித்ஸபையையே சொர்ண சபை என்றும் சொல்வதுண்டு. ஆனந்த தாண்டவ தரிசனம் ஆனபிறகு பதஞ்சலி, வ்யாக்ர பாதர் முதலிய ரிஷிகளால் தாண்டவ பூமிக்கு நான்கு புறத்தி லும் தங்கப்பட்டங்களாலே கவசம் போட்டு அலங்காரம் செய்யப்பட்டதாக சொல்லப்பட்டிருப்பதாலும் இந்த சித் ஸபையை சொர்ண சபை என்று சொல்வதாயுமிருக்கிறது. மேலும் இந்த சித்ஸபையே ஸ்ரீமந் நடராஜமூர்த்தியின் சொரூபம் என்றும் மூர்த்திக்கும் ஸபைக்கும் சிறிது கூட

பேதமில்லை என்றும் புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது இவ்வாறு மகாமகிமை வாய்ந்த சித்ஸபையின் நடுவில் வேத ஸ்தம்பங்கள் சூழ்ந்த வித்யாபவனமான பிரணவ பிடத்தில் சகல சொருபமான பகவான் ஸ்ரீமன் ஆனந்த நடராஜ ராஜ மூர்த்தி பிரகாசிக்கிருர். சிரசில் கங்கையையும், சந்திரனையும் நெற்றியில் காலாக்கினியையும், கழுத்தில் காலகூடத்தையும் மார்பில் சொர்ண பூநூலையும், கை, கால்களில் சர்பாபரணங் களையும், இடையில் புலித்தோலையும், கால்களில் தங்கச்சிலம்பு களையும் வலதுகைகளில் டம்ருகத்தையும் அபயமுத்திரையை யும் இடது கைகளில் அக்னியையும் அனுக்ரஹ முத்திரை யையும், வலது பாதத்தால் அபஸ்மாரம் எனும் மஹாமோக ரூபியான முசலகனை அடக்கிக்கொண்டும், பக்தர்களுக்கு முக்தி அளிக்கும் குஞ்சித சரணாரவிந்தத்தை அநுக்ரஹ கரத் தால் காண்பித்துக்கொண்டும் இடது பாகத்தில் பார்வதியாம் சிவகாமசுந்தரி அம்பாளுடன் கூடிக்கொண்டும் இருபக்கங் களிலும் பானுகம்பன், பாணசுரன், பதஞ்சலி, வ்யாக்ரபாதர், த்ரிஸஹஸ்ர முனிச்வரர்கள் எனப்படும் தில்லை மூவாயிரம் தீக்ஷிதர்களால் சேவிக்கப்பட்டவராய்க் கொண்டும் டமருகம் தாங்கும் வலது கையால் சிருஷ்டியையும், (படைத்தல்), வலது அபயகரத்தால் ஸ்திதியையும், (காத்தல்), இடது அக்னி ஹஸ்தத்தால் சம்ஹாரத்தையும் (அழித்தல்)முசலகனை அடக்கும் வலது காலால் திரோதானத்தையும் (மறைத்தல்) இடது குஞ்சித சரணாம்புஜத்தால் அநுக்ரஹத்தையும் (அரு ளல்) பிரகாசிக்கச்செய்யும் பஞ்சக்ருத்திய பரமானந்த தாண்ட வத்தை பிரம்மா தாளத்தையும், நந்திகேச்வரரும் அயக் ரீவரும் தும்புருவும் மிருதங்கத்தையும் இந்திரன் புல்லாங் குழலையும், விஷ்ணு மத்தளத்தையும், சரஸ்வதியும், நாரதரும் வீணையையும் வாசிக்க "தித்தாம் தித்தாம் திமித்தாம் திமிதிமி திமிதாம் திந்திமி திந்திமி" என்று ஒலிக்க எப்பொழுதும் பக்தர்கள் உய்ய செய்துகொண்டு திவ்யமாக ஜகஜ்ஜோதியாக விளங்கி வருகின்ருர். இந்த ஸ்ரீ நடராஜ மூர்த்தியை ஒரு

தடவை பக்தியுடன் தரிசனம் செய்தவர்களுக்கு சகல பாபங்களும் தொலேந்து சகல மங்களங்களும் கிடைக்கின்றன என்பது சாஸ்திரங்களின் நிலேயான தீர்மானம்.

இவ்வாறு ம்ஹாமஹிமை பொருந்திய ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கு மேற்புறத்தில் சகல நிஷ்களமாகிய வயக்தாவ்யக்த தத்துவமான முகலிங்கமும் அதற்கு வடபுறத்தில் மாயாயவனிகா (கருப்புத்திரை) அதன் பின்புறத்தில் ஞானிகள் அறியத்தகுந்ததும் குணவரம்பு கடந்ததும் சிதாகாசஸ்வரூபமாயும் நிஷ்களமாயும், பரமரகசியமாயும் உள்ள ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் அருபஸ்தானம். சிதாகாச வடிவினையே ஊனக் கண்ணுல் கண்டோர் தங்க வில்வமாலேயையே ரகசியமென்பர். அது உண்மையன்று. பாமரமக்கள் காண்பதற்கெனவே அமைக்கப்பட்டுள்ளன. அத்தங்க வில்வசரங்கள் அங்கு ஸ்ரீ சக்ரம், சிதம்பரசக்ரம், சம்மேளன சக்ரம் மஹா தாண்டவ சக்ரம், திரஸ்கரணி சக்ரம், ஆனந்த சக்ரம் முதலிய சிறந்த சக்ரங்கள் அமைக்கப்பட்டுள்ளன என்று பெரியோர்கள் கூறுவர். இதற்கே பிரதிதினம் இரவு இரண்டாவது கால பூஜையில் ஏழரை மணிக்கு விசேஷ பூஜை அன்றைய ஆசாரியரால் நடத்தப்படுகிறது. பக்தர்களும் விசேஷ தினங்களில் மற்றேனைய காலங்களிலும் ரகசிய பூஜை சிறப்பாக நடத்தச் செய்கின்றனர். இதுவே ஆகாச ஸ்தானத்தின் பரம மூலஸ்தானம். ப்ரணவ பிடத்தில் சூட்சுமமான ரத்னமயமான ரத்னசபாபதி மூர்த்தியும் சூட்சமதரமான ஸ்படிக லிங்கமயமான சந்திரமௌலீச்வர மூர்த்தியும் உள்ளன. சித்சபையின் மேல்புறத்தில் அசையும் வெள்ளி ஸ்தம்பத்தின் மேலே திரிசூலத்தின் மத்தியில் உக்ர ரூபமாக பிரகாசிக்கும் மூர்த்தி அஸ்திரராஜரும், நடேச பாதுகையும், கீழ்புறத்தில் சொர்ணுகர்ஷண பைரவ மூர்த்தியும் அதற்குத் தென்புறத்தில் ஸ்ரீ பலிநாயகரும் உள்ளனர்.

## ஸ்ரீ நடராஜமூர்த்தி

வேதாந்தோத் கீதரூபம் ஜ்வலன டமருகம் தாரயந்தம்
கராப்யாம் |
அங்யாப்யாம் டோலமுத்ராம் அபயமபி ஸதா அபஸ்மிருதௌ
தட்சபாதம் ||
விங்யஸ்ய ஆகுஞ்சிதேன பிரணமத கிலதம்வாம
பாதேனநித்யம் ||
தவ்யாலஸாகம் ஸபாயாம் ரசயதிநடனம குஞ்சிதாங்க்ரீம்
க்ரிம்பாஜஅஹம் |

ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் வலது கரத்திலுள்ள டமருகத்திலிருந்து பானினி முதலிய முனிவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி பகவான் பதினுன்கு தடவை அடித்தபோது பதினுன்கு சூத்திரங்கள் ஒலித்தன. இதை மூலமாக வைத்துக்கொண்டு பாணினி வியாகரண சாஸ்திரத்தை இயற்றினுர் என்பது லோகப்பிரசித்தம். இந்த நாதத்திலிருந்து சங்கீதம் தோன்றியதென்றும் அறிஞர்கள் கூறுவர். இடது கையிலுள்ள அக்னியானது தனது பாத சேவையாலேயே சர்வகர்ம பலசித்தி ஏற்படுகிறது என்பதை அக்னி சாட்சியாக பகவான் கூறுவதுபோல் தோற்றமளிக்கிறது. புலித்தோலையும், பாம்புகளையும், பிரம்மகபால மாலையையும், விபூதியையும் தரித்துக்கொண்டிருப்பது பரமவைராக்யத்தை போதிக்கிறது.

அபயகரத்தால் தனது பாதசேவை செய்தவர்கட்கு யம பயம் இல்லை என்பதை போதிக்கிருர். முயலகனை அடக்கும் பாதத்தால் அவித்யா நாசம் தன்னை அண்டியவர்களுக்கு ஏற்படும் என்பதை தெரிவிக்கிருர். தூக்கிய திருவடியை சேவிப்பவர்களுங்கு என்றும் நான் துணை என்பதை தூக்கி எண்பித்துக் காட்டுகிருர். காலில் நகாரத்தையும் தொப்பூளில் மகாரத்தையும், கைகளில் சிகாரத்தையும், முகத்தில் வகாரத்தையும், தலையில் யகாரத்தையும், நெருப்பைக் கையிலேந்தும் இடது கரத்தில் நகாரத்தையும், வலது காலில் மகாரத்தை

யும் வளைந்த காலிலும் கையிலும் சிகாரத்தையும், டமருகம் தாங்கிய கையில் வகாரத்தையும், அபயஹஸ்தத்தில் யகாரத் தையும், திருவாசியில் ப்ரணவத்தையும் த்யானம் செய்யும் பக்தர்களுக்கு வேண்டிய வரங்களை அளிக்கிறவராய்க்கொண்டு பஞ்சாட்சரமயமான உடலை தரித்துக்கொண்டு விளங்குகிருர் ஸ்ரீ நடராஜ மூர்த்தி. மற்றேனைய ஸ்தலங்களில் உள்ள நடராஜ மூர்த்திகளுக்கெல்லாம் தலையாய மூர்த்தி நடராஜ ராஜமூர்த்தி. இங்குதான் ஆகாசவெளியில் தான் விரும்பிய வண்ணம் ஆனந்த தாண்டவம் செய்தருள்கின்ருர். இந்த மூர்த்தியை வழிபடுபவர்களுக்கு சதா ஆனந்த ப்ராப்தி ஏற் படும் என்பது சாஸ்திரங்களின் கருத்து. இந்த நடராஜ மூர்த்தி வருஷத்திற்கு இருமுறைதான் வீதி வலம் வரு கின்ருர் ரத உற்சவத்தில். மற்றும் நான்கு தினங்களில் கனக சபைக்கு எழுந்தருளுகிருர். மற்றேனைய நாட்களில் சித்சபை யிலேயே இருந்துகொண்டு பரமானந்தக் காட்சி யளித்துக் கொண்டிருக்கின்ருர் என்பது பெரும் விசேஷமாகும்.

## ஸ்ரீ சிவகாமசுந்தரி

சிவகாம ஸுந்தரீம் தாமகில ஜகன்மாதரம் க்ருபார்த்ர
ஹ்ரதம் |
ஸ்ரீ சித்ஸபே சமஹிஷீம் சிதம்பர க்ஷேத்ர வாஸினீம்
வந்தே ||

க்ரியா சக்தி சொரூபிணியான அம்பிகை ஈசனின் தாண் டவக் கிரியைக்கு சாட்க்ஷியாக இருந்துகொண்டு இரு கரங்க ளுடன் வலது கரத்தில் தாமரையையும், இடது கையை தொங்கவிட்டுக் கொண்டும் பக்தர்கட்கு வரங்களை வழங்கிக் கொண்டும் ஆனந்த தாண்டவத்தை அனுபவித்துக்கொண்டும் ஸ்ரீ நடராஜரின் இடது புறத்தில் விளங்குகின்ருர். இருபுறங் களிலும் சுகேசா (ஜயா), சுயசா (விஜயா) என்னும் இரு சகிமார்களை வைத்துக்கொண்டும் இருக்கிருள்.

## ஸ்ரீ ரகசியம்

லோகாதி சாயிவிபவம் மஹத்ஆலேவே சிதம்பர ரகஸ்யம் |
பஞ்சாட்சுரி யதியா ஜீவாது: சர்வலோக சுபதாத்ரீ ||
சக்தி: சமக்ரா: க்ரஸதே நிருந்தே யஸ்மின்ச கௌர்யா
வலதேகபர்தீ |
யஸ்மாத் ப்ரகே விச்வம் உபைதி சக்திம் சகாஸ்நிதத்
சேதஸிமே சகாஸ்து ||

மேற்புறத்தில் கருப்பு பட்டாலும், உட்புறத்தில் சிவப்பு பட்டாலும் ஆக்கப்பட்ட திரைச் சீலையால் மறைக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ நடராஜரது வலது புறத்தில் அமைந்திருக்கும் ஸ்தானமே ரகஸ்ய ஸ்தானம். இதில் உள்ளே பல ரத்னங்களால் இழைக்கப்பட்ட தங்க வில்வ சரமாலைகள் பக்தர்களின் ஊனக் கண்ணிற்கு தோற்றமளிக்க தொங்கவிடப்பட்டிருக்கின்றன. தினந்தோறும் நடைபெறும் ஒவ்வொரு கால பூஜையின் முடிவிலும் அன்றைய பூஜகர்கள் மேற்படி த் திரையை மூன்றுதரம் நீக்கி பக்தர்களுக்கு தரிசனம் காண்பிவிக்கின்றார்கள். இது தகராகாச க்ஷேத்ரமாகையால் இரவு அர்த்தஜாம காலத்தில் இந்த ரகஸ்ய ஸ்தானத்தில் மற்றேனைய ஸ்தலங்களிலுள்ள தேவதைகள் ஒடுங்குகின்றன என்றும் காலை உஷக்கால பூஜையில் இரவு அடங்கியுள்ள எல்லா தேவதைகளும் தத்தம் இருப்பிடத்திற்கு செல்கின்றன என்றும் (எவ்வாறு தூக்கத்தில் ஐம்புலன்களும் ஹிருதயத்தில் ஒடுங்கி விழித்தபின் அவ்வவ்விடத்திற்கு செல்கிறதோ)சாஸ்திரங்கள் கூறுகின்றன இது தகரக்ஷேத்ரம்என்பது யாதுளனில் சிறிது விளக்குவோம். ஆதிபௌதிகம், ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், என மூன்று வகையாக சாஸ்திரங்கள் பிரித்துக் கூறுகின்றன. அதில் இப்பிரபஞ்சத்தை விராட் புருஷனுடைய உருவமாக சாஸ்திரங்கள் கூறுகின்றன அதில் ஸ்ரீ பர்வதம் தலைபாகவும், கேதாரம் நெற்றியாகவும் வாராணசி இருபுருவங்களின் நடுஸ்தானமாகவும் குருக்ஷேத்

ரம் குசஸ்தானமாகவும் ப்ரயாகம் ஹிருதய ஸ்தானமாகவும் கமலாலயம் ஆதார ஸ்தானமாகவும், சிதம்பரம் ஹ்ருதய மத்ய ஸ்தானமாகவும் கூறப்பட்டுள்ளது—ஜாபால தரிசன உபநிஷத்தில் அத்தகைய ஹ்ருதய மத்யஸ்தானமான சிதம் பரத்தில் சித்ஸபையில் விற்றிருப்பவரை தியானம் செய்வது ஆதிபௌதிக உபாசனமாகும.

நமது உள்ளத்தில் பகவானை உபாசிப்பது ஆத்யாமிகி என்னும் இரண்டாவது தகரவித்யை யாகும். நமது உள்ளத் தில் விஷ்ணுவை உபாசனத்தால் இருத்தி அவரது உள்ளத் தில் நடராஜமூர்த்தி இருப்பதாக உபாசிப்பது ஆதிதைவிக உபாசனமாகும். இதனது விரிவை கைவல்ய உபநிஷத்திலும் சாந்தோக்ய உபநிஷத்திலும் கிருஷ்ண யஜுர்வேத நாராயண உபநிஷத்திலும், சுக்ல யஜுர்வேத ப்ரகதாரண்யக உபநிஷத் திலும், பிரம்ம சூத்திரத்திலும் யோகயாக்ஞய வல்க்யத்தி லும் சூதஸம்ஹிதையிலும் ச்ருதிஸூக்தி மாலையிலும் புண்டரிகபுர மாஹாத்மியத்திலும் காணலாம். மேலும் இந்த ரகஸ்ய ஸ்தானத்தை குறிப்பிட்டே ஆனந்தகிரி ஆசாரி யரால் இயற்றப்பட்ட சங்கர விஜயத்தில் கூறியுள்ளபடி சிதம் பரத்திலே பிறந்து நடராஜரை உபாசித்த ஆதிசங்கர பகவத் பாதாள் தசச்லோகியில் கூறியுள்ளார்கள். கனகசபையி லிருந்துகொண்டு ரகசியத்தை பார்க்குங்கால் நம்கண்ணில் முதலில் தோன்றும் கவாட்க்ஷத்திலுள்ள வெள்ளியும், திரை யின் முன்புறம் உள்ள கருப்பும், உட்புறமுள்ள சிவப்பும், சொர்ண வில்வ மாலையின் மஞ்சளும், ரகசியமல்ல. அதனூடே அரூபமாக அமைந்திருக்கும் நித்யஜோதிஸே தகராகாச சிவஸ்ரூபம் என்று இந்த ரகசிய ஸ்தானத்திற்கு ஆனி. மார் கழி உத்ஸவத் தரிசனத்தன்று புனுகு சட்டம் பூசப்பட்டு புது திரைச்சீலையும் சாற்றப்படுகிறது. இத்தகைய மகாமஹிமை வாய்ந்த சிதம்பர ரகசியத்தை தரிசிப்பதால் சுலபமாக வீடு பெறலாம் என்பது சாஸ்திரங்களின் துணிபு.

# ஸ்ரீ சந்திரமௌலீச்வரர்

சந்திரமௌலீச்வரம் லிங்கம் சந்த்ராம்ருத கணம்ஸ்திதம் |
சூர்யேந்த்வக்னி ருசிம் சூக்ஷ்மம் கோமுகே ஸ்தாபிதம் பஜே ||

இந்த லிங்கம் சூட்சும லிங்கமாகும். லிங்கம் என்னும் பதத்திற்கு லிங்—லயம் கம்—தோற்றம் எனப் பொருள் கொண்டு உலகமும் விஷ்ணு முதலான உயிர்த்தொகைகளும் லயித்ததற்கு (ஒடுங்குதற்கு) இடமாயுள்ளது என பொருள். லிங்கம் என்னும் பதத்திற்கு பிரகாசம் எனப்பொருள் கொண்டு சிருஷ்டியாதி பஞ்ச க்ருத்யங்களாலும் உலகம் யாவற்றையும் பிரகாசப் படுத்துவது எனவும் கொள்ளலாம். பரமேச்வர ப்ரபாவமே லிங்கம் எனப்படும் என்பன சிலர். ஆகவே லிங்கம் என்பது சிவமேயாகும். ஆன்மாக்களின் த்யான பூஜாநிமித்தம் அச்சிவம் விளங்கும் சிலை முதலிய வடிவங்கட்கு கற்பிக்கப்பட்ட பெயராகும். அகாரம், கண்டம் உகாரம் கோமுகம், மகாரம் வட்டம் எனவும் அகாரவாச்யம் சிவம் உகாரவாச்யம், சக்தி மகாரவாச்யம் பரம் எனவும், அகாரம் நாதம் உகாரம் பிந்து மகாரம் கலை எனவும் விருத்தம் (வட்டம்) ருத்ரபாகம் நடுமுனை விஷ்ணுபாகம் கீழ்ப்பகுதி ப்ரம்மபாகம் எனவும் ருத்ரபாகம் புல்லிங்கம் விஷ்ணு பாகம் ஸ்திரீலிங்கம் பிரம்ம பாகம் நபும்சகலிங்கம் எனவும் தத்துவம் அறிந்தவர்கள் கூறுவர். இத்தகைய மஹிமை வாய்ந்த ஸ்படிக மயமான லிங்கம் ஆதிகாலத்தில் த்ரிசகஸ்ரமுனிச்வரர்களுக்கு ஸ்ரீ நடராஜமூர்த்தி தனது சிரசில் உள்ள சந்திரனின் அமிர்த கிரணங்களை கெட்டியாக்கி ஆத்மலிங்கமாக சந்திர மௌலீச்வரர் என்ற பெயருடன் அளித்தார் என்பது. சிதம்பர மஹாத்மியங்களின் கொள்கை. இதனை வழிபட்டால் சிறந்த அறிவுகிட்டும். உள்ளத் தூய்மை ஏற்படும் அகந்தை நீங்கும். ஓய்வு கிட்டும். வீடு பெறலாம் என்பது தத்துவம்.

## ஸ்ரீ ரத்தினசபாபதி

இந்திரநீல சமானகாந்தி சமேதித ஆத்மதனுப்ரபம் |
இந்திரநீல மணிப்ரகாண்ட மய ஆத்மதேக விபாசுரம் ||
இந்திரமுக்யதி வௌகஸாதி சமர்ச்சிதம்ச்ருதி மார்கிதம் |
இந்திரநீல மகார்க ரத்னசபாபதிம் சிவம்ஆச்ரயே ||

ஈசனை வழிபட அவரது உருவத்தை கட்டைவிரல் அளவிற்கு த்யானம் செய்வது சூக்சுமதரம் என்றும் ஒருசாண் அளவில் அவர் உருவை உபாசிப்பது சூக்சுமம் எனவும் புருஷாகாரமாக அவரை உபாசிப்பது ஸ்தூலம் என்றும் வடிவற்ற நிலையில் ஞான உருவாக வழிபடுவது சூக்சுமதமம் என்றும் சாஸ்திரங்களின் உயரிய கொள்கை. அதில் சூக்சுமதரம் சந்திரமௌலீச்வரர். ஸ்தூலம் நடராஜமூர்த்தி சூக்சுமதமம் ரகசியம். சூக்கமம். இந்த ரத்தினசபாபதிமூர்த்தி. இவ்வளவில் எங்கும் காண கிடைத்தற்கரிய சிறந்த ஜோதிர்மயமான மூர்த்தி. இம்மூர்த்திக்கு பிரதிதினம் காலை பத்து மணிக்கு அபிஷேகம், பூஜை நடைபெறுகின்றது. இதற்கு அபிஷேகம் செய்யும் பொருள்கள் தீர்த்தம், பால், தேன், சந்தனம் இவைகளே. பூஜை முடிவில் ஆசார்யரால் கர்பூரஹாரத்தி காட்டப்படும்போது இதில் பொதிந்துள்ள நடராஜ உருவம் ஜோதிவடிவாக தெள்ளெனவிளங்கும். இம்மூர்த்திக்கு தேன் அபிஷேகம் நிரம்பச் செய்தால் பாடகர்களுக்கு மதுரகண்டம் (இனிமையான குரல்) ஏற்படும் என்பது பெரியோர்களின் வாக்கு

முன்னொருசமயம் ப்ரும்ஹ தேவர் அந்தர்வேதி என்னுமிடத்தில் மிகப்பெரிய வேள்வி ஒன்று செய்யக்கருதி தில்லைவாழ் அந்தணர்கள் எனப்படும் தீக்ஷிதர்கள் மூவாயிரம்பேரையும் அழைக்க தில்லைக்குவந்து அவர்களை வேண்டினர். அப்போது நாங்கள் பகல் போஜனத்திற்கே திரும்பிவிட வேண்

டும் அதற்கு வேண்டிய சௌகர்யம் செய்தால் வருவதாக வாக்களித்து ப்ருமாவுடன் சென்றனர். யாகம் சிறப்பாக முடிவுற்றது. பின் அந்தணர்கள் தில்லைக்கு புறப்பட்டனர். பிரும்மதேவன் இதைக்கண்டு வந்த அதிதிகளுக்கு அன்னம் இடாமல் அனுப்புகிறோமே எனவருந்தி சாப்பிட்டபின் செல்லலாம் என்று வற்புறுத்தியும் ஸ்ரீ நடராஜரை பூஜை செய்யாமல் உண்ணோம் எனக்கூற பிரும்மா மிகமிக வருந்தி ஈசனை நினைத்து த்யானம் செய்யத் தொடங்கினர். அவரது உண்மையான ப்ரார்த்தனைக்கு இணங்கி வேள்வித் தீயிலிருந்து ஜோதிர்மயமான ஒரு உருவம் கிளம்பியது. அதைக் கண்ணுற்ற தீக்ஷிதர்கள் யாகத் திரவியங்களான பால், தேன்; சந்தனம் இவைகளால் அதைக் குளிரச் செய்து பார்த்ததில் நடராஜரின் உருக்கொண்ட ப்ராதேசமாத்திர அளவு கொண்ட மாணிக்க மூர்த்தி தென்பட்டது. ப்ரும்மா இதைக்கண்டு மிகக் களிப்புற்று ஈசனின் அருளாலேயே வந்தது இம்மூர்த்தி- ஆகையால் இம்மூர்த்தியை பூஜை செய்து விட்டு உணவு அருந்த வேண்டினர் அந்தணர்களை. அவரது வேண்டுகோளுக்கிணங்கி அம்மூர்த்தியையே பூஜை செய்து விட்டு உணவு அருந்தினர். அங்கிருந்து திரும்புங்கால் எங்களுக்காகவே பகவான் அருளால் வேள்விக் கனலிலிருந்து வந்த மூர்த்தி ஆனபடியால் நாங்களே எடுத்துச்செல்ல உரிமையுள்ளவர்கள் எனக்கூறி சிதம்பரத்திற்கு எடுத்து வந்து அன்று முதற்கொண்டு இன்றளவும் அம்மூர்த்திக்கு வழிபாட்டினை நடத்தி வருகின்றனர்.

## ஸ்ரீ முகலிங்கம்

அபூதபூர்வம் ப்ரததே ஜகத்யாம் யல்லிங்கம் ஆசாதித
திவ்யவக்த்ரம் |
தத:ப்ரஸித்தம் முகலிங்க நாம்னாதல்லிங்க மீசஸ்ய
ஸதாஸ்மராமி ||

சிவலிங்கம் திருமுகங்களைப் பெற்றிருப்பின் முகலிங்கம் எனப்பெறும். இதையே கோளகலிங்கம் எனவும் கூறுவர். இதுவே ஆட்யம் அநாட்யம், சுரேட்யம், சர்வசமம் என நான்கு வகைப்படும். ஆயிரத்தொரு (1001) முகங்களுடையது ஆட்யம் எனவும் (108) நூற்றெட்டு முகங்களுடையது சுரேட்யம் எனவும் திருமுகங்கள் பெருதது அநாட்யம் என்றும், ஈசானம் தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோ ஜாதம் முதலிய ஐந்து முகங்களையுடையதாகவும், தத்புருஷம் அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என நான்கு முகங் களை உடையதாகவும், அகோரம் தத்புருஷம், வாமதேவம், என மூன்று முகங்களை உடையதாகவும், தத்புருஷம், சத்யோ ஜாதம் என இரண்டு முகங்களை உடையதாகவும், தத்புருஷம் என்ற ஒரேஒரு முகமுடையதாகவும் இருப்பது சர்வசமம் எனவும் கூறப்படுகிறது. இங்கு உள்ளது சர்வசமத்தில் ஒரு முகமுடைய தத்புருஷ முகலிங்கமாகும். ஈச்வரனைப்போல் தனக்கும் ஐந்து முகங்கள் இருக்கின்றன என்று கர்வம் கொண்ட பிர்மாவின் ஒருமுகத்தை சிவன் கொய்து எல் லோரும் அறிய தனது வலதுபுறத்தில் வைத்து தில்லைவாழ் அந்தணர்களின் பூஜையையும் பெறச்செய்து, தனது இடது புறத்தில் சண்டேச்வரருக்கு வலதுபுறத்தில் நான்முகமாக இருக்கச்செய்து தனது நிர்மால்யத்தை பெரும்பாக் யத்தையும் அடையச் செய்தார் எனவும் பெரியோர் கூறுகின் றனர் இதற்கு ஒவ்வொருகாலத்திலும் வழிபாடு நடை பெறுகிறது.

## ஸ்ரீ சிவ பாதுகை

சகல மனுஜ ரக்ஷா தீக்ஷிதம் வேதரீத்யா |
த்ரிஷவணம் அதிபக்த்யா தீக்ஷிதை: அர்ச்யமானம் ||
ஹரிவிதி ஸனகாத்யை : நித்ய நித்யாய மானம் |
சயன க்ருஹயியாஸும் பாதயுக்மம் ப்ரபத்யே ||

ஸ்ரீ நடராஜருடைய பாதுகை இது. இதில் ஸ்ரீ நடர்ாஜ ரை ஆவாகனம் செய்து ஆறு காலங்களிலும் பூஜை நடை பெறுகிறது. உலகில் இச்சிதம்பரம் உத்தமம். இதைக் காட்டிலும் இங்குள்ள சிவகங்கை என்னும் தீர்த்தம் மிக உத்தமம். இதைக் காட்டிலும் சிதம்பர பஞ்சாட்க்ஷர மஹா மந்திரமானது மிக உத்தமம். இதைக் காட்டிலும் நடனபதி யான மஹாதேவரான நடராஜர் உத்தமோத்தமர். அவரைக் காட்டிலும் அவருடைய தாண்டவமாடும் பிறவிக் கடலுக்கு பெரும் தெப்பமாகவும் செந்தாமரை போன்ற ஒளியுடையது மான குஞ்சித சரணம் மிகச் சிரேஷ்டமானது என்று சிதம்பர மஹாத்மியத்தில் கூறப்பட்டிருப்பதால் பாதுகையின் வழிபாடு மிகச் சிறந்தது எனப் புலப்படுகிறது. இப்பாதுகையை இரவில் அர்த்தஜாம காலம் ஆன பிறகு பல்லக்கில் வைத்து பள்ளியறைக்கு எழுந்தருளச் செய்து அம்பாளுடன் ஏகாசன டோலையில் ஊஞ்சலில் பூஜை நடைபெறுகிறது. காலையில் உஷக்கால பூஜைக்கு முன் பள்ளியறையிலிருந்து மேற்படி சிவபாதுகைகளை பல்லக்கில் அமர்த்தி சித்ஸபைக்கு கொண்டு வந்து ரகசியத்திற்கருகில் வைத்து வழிபாடு நடத்தப்படுகிறது. பாதசேவையே சிறந்தது என்பதை இப்பாதுகையின் பூஜை விளக்குகிறது. ஆதலாலேயே விஷ்ணு தேவாலயங்களில் விஷ்ணு பாதுகைகளை கிரீடத்தின் மேல் அமர்த்தி பக்தர்கள் சிரசில் சடாரி என்ற பெயருடன் வைத்து சிறப்பிக்கின்றனர். ஆதலாலேயே ராமாயணத்தில் பரதனுக்கு பாதுகையையே அளித்து ராஜ்ய பரிபாலனம் செய்யச் செய்தார் ராமர். பாத சேவை செய்த அர்ஜுனனுக்கு கிருஷ்ணன் தன்னையே அர்ப் பணித்து கீதோபதேசம் செய்து வெற்றி பெறச் செய்தார். ஆகையாலேயே இப்பாதத்தின் பெருமையை விளக்க உமாபதி சிவாச்சாரியார் (தில்லைவாழ் அந்தணர்களில் ஒருவர்) குஞ்சிதாங்க்ரிஸ்தவம் என்னும் சிறந்த ஸ்துதி க்ரந்தத்தை முன்னூற்று பதினைந்து ச்லோகங்களால் ஆக்கித்தந்துள்ளார் வேதாந்த தேசிகரும் பாதுகாசகஸ்ரம் என்ற பெயரில் ஆயிரம் ச்லோகங்களால் ராம பாதுகாப்ரபாவத்தை தெளிவுபடுத்தி

யுள்ளார். ஆகவே நடேசருடைய குஞ்சிதபத தரிசன மாத்ரத்தால் சர்வதுக்க நிவர்த்தியும் பரம சுகப் பிராப்தியும் ஏற்படும் என்பது சாஸ்திரங்களின் துணிபு.

## ஸ்ரீ அஸ்திரராஜர்

விநா அஸ்திரராஜம் நசிவஸ்ய யாத்ரா |
விநா அஸ்திரராஜம் நச மஜ்ஜநாதி ||
விநா அஸ்திரராஜம் நமஹா : பகஸ்ய |
தம் அஸ்திரராஜம் ப்ரணமாமி மூர்த்நா ||

இந்த சித்ஸபையின் மேல் புறத்தில் அசையும் வெள்ளி ஸ்தம்பத்தின் மேலே இருக்கும் திரிசூலத்தின் மத்தியில் உக்ர ரூபியாய் ப்ரகாசிக்கும் மூர்த்தியை அஸ்திரராஜர் என்று சொல்லுவார்கள் இதற்கு பிரதிதினம் பூஜை நடைபெறுவதோடு அமாவாசை, மாதப்பிறப்புமுதலிய தீர்த்தோற்சவ புண்ய காலங்களிலும் இவருக்கு அபிஷேகம் முதலிய விசேஷ பூஜைகள் நடத்திய பிறகே தீர்த்தோற்சவம் நடத்துவது வழக்கம் மேலும் த்வஜாரோஹண உற்சவங்களிலும் ஈசவர பிரதிநிதியாக இவரை நான்கு விதிகளிலும் எழுந்தருளச்செய்து திக்பலி போடுகிறார்கள். இவரது வழி பாட்டால் அஸ்திர பாதையினால் ஏற்படும் துன்பம் நீங்கும் என்பது பெரியோர்களின் கருத்து.

## ஸ்ரீ ஸ்வர்ணகாலபைரவர்

ஸ்வர்ண கால பைரவம்த்ரி சூலயுக்தபாணி நம் |
வேதரூப ஸாரமேயஸம்யுதம் மஹேச்வரம் ||
ஸமாச்ரிதேஷு ஸர்வதாஸமஸ்தவஸ்து தாயினம் |
மகிந்த்ரவம்ச பூர்வபுண்ய ரூபிணம் ஸமாச்ரயே ||

சுமார் இருநூறு (200) வருஷங்களுக்கு முன் தீக்ஷித சிரேஷ்டர்கள் இந்த பைரவ மூர்த்தியினுடைய பாதத்தில் செப்புத் தகட்டை இரவில் அர்த்தஜாம பூஜா சமயத்தில்

சாத்தி காலையில் அந்த மூர்த்தியின் ப்ரபாவத்தால் சொர்ண மயமான அந்தத் தகட்டை பெற்று ஜீவனம் செய்தார்கள் என்பது முதியோர் மொழி. ஆதலால் இந்த பைரவரை சொர்ணகர்ஷண பைரவர் என்றும் கூறுவர். இம்மூர்த்தி நடராஜருடைய சித்ஸபையில் கீழ்புறத்தில் அமைந்துள்ளது. இதற்கு தினம் நடைபெறும் அபிஷேக காலங்களில் விசேஷ தினங்களில் (அஷ்டமி முதலிய) பக்தர்களின் வேண்டுதலுக்காக கனகசபையில் இம்மூர்த்தியை எழுந்தருளச்செய்து விசேஷ அபிஷேகங்கள் நடாத்துகின்றனர். நெய்யினலாக்கப்பட்ட வடை மாலை சாத்தி உபசாரம் செய்கின்றனர்: அந்தந்த காலம் ஆவதற்குமுன் இவருக்கு தனியே அன்றைய ஆசாரியரால் பூஜை, தீபாராதனை நடத்தப்படுகின்றது. இவருடைய ஆராதனத்தால் ஸ்வர்ண லாபமும், பய நிவர்த்தியும் சர்வ அபிஷ்ட சித்தியும் ஏற்படும் எனபெரியோர் கூறுவர்.

## ஸ்ரீ பலிநாயகர் !

பலிநாயகம் ஈசானம், பலதாதாரம் அவ்யயம் |
உமயா சகிதம் தேவம் மஹேச்வரம் உபாஸ்மஹே ||

இம் மூர்த்தி நடராஜருக்கு கீழ்ப்புறத்தில் இருக்கிறார். தினந்தோறும் காலஸந்தி பூஜைக்கு பிறகு இம் மூர்த்தியை பல்லக்கில் வைத்து உள் ப்ராகார உற்சவம் நடத்தி எட்டு திக்குகளிலும் அன்ன பலி வழங்கி வருகிறார்கள். ஆதலாலேயே இம் மூர்த்திக்கு பலிநாயகர் எனப் பெயர். அமாவாசை, பிரதோஷம், மாதப் பிறப்பு, திருவாதிரை முதலிய விசேஷ தினங்களில் இம் மூர்த்திக்கு உள்வல, வெளிவல, விதிவல உற்சவம் நடைபெறுகிறது.

## ஸ்ரீ பிர்மா சண்டிகேசர்

பஞ்சானன : ய : புறத : ப்ரகருத்யா பரம் நிக்ருத்தஸ்வசிரா:
சிவேன: |
கலி: ச்ருதினம் வதனனி யஸ்ய ப்ரம்மானம் அம்போஜபவம்
நமாமி ||

சண்டீச்வர : ஸ்தாணு ஸமானதேஜா: ருத்ரேண நிக்ஷிப்த
ஸமஸ்த பார: |
யஸ்யப்ரஸா தாத்ஸபலா சிவார்சாதம் சண்டிகேசம்
ப்ரணமாமி சஅந்தே ||

சித்சபைக்கு கிழ்ப்புறத்தில் கிழே பிரம்மா, சண்டிகேச்வரர் இருவரும் ஒரே இடத்தில் அமர்ந்திருக்கின்றனர். இவர்களுடைய தரிசனத்தாலேயே சிவதரிசன சம்பூர்ண பலனை அடையவேண்டும் என்பது சாஸ்திர சித்தாந்தம். சண்டிகேச்வரருடன் பிரம்மா சேர்ந்திருக்கும் இடம் சிதம்பரம் ஒன்றே. மற்றனைத்திந்திய சிவ ஸ்தலங்களில் சண்டிகேச்வரர் மட்டும தான் காணப்படுவர். ஆதலால் அங்கு சிவ நிர்மால்யத்தை (சிவனுக்கு நிவேதனமான அன்னம் முதலியவற்றை) உபயோகிப்பது தோஷம். ஆனல் சிதம்பரத்தில் பிர்மமதேவருடன் சேர்ந்திருக்கும சண்டிகேச்வரருக்கு நிவேதனமாகும் அன்னம் முதலியவற்றை புசிப்பது தோஷமாகாது என்பது சாஸ்திரம். பிரும்மா இங்கு சிதம்பரத்தில் சண்டிகேசருடன் சேர்ந்து பூஜை பெறுவதற்கு இரு இதிகாசங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள் ப்ரம்மதேவர் சிவனது முடியைக் கண்டதாக பொய் கூறியதால் உன்னை ஓரிடத்திலும் ஒருவரும் தனித்து பூஜிக்கமாட்டார்கள் என்று பரமசிவன் சபித்தார். (ஆதலால்தான் ப்ரம்மனுக்கென்று தனித்து ஓரிடத்திலும் கோவில் கிடையாது)

பிறகு பிரம்மதேவர் நீண்டகாலம் தவம் புரிந்ததாகவும் அத்தவத்திற்கிறங்கி கருணுவள்ளலான ஸ்ரீ சிவன் சிதம்பரத்தில் சண்டிகேச்வரருடை வலதுபுறத்தில் உன்னை அர்த்தஜாம காலத்தில் பூஜை செய்வார்கள். அதனுல் உனக்கும் பூஜை கிடைக்கும். எனது பிரசாதத்தை ஏற்கும் முழு உரிமையுடைய சண்டிகேசனுக்கு உன்னுடன் (பிரமனுடன்) சேர்த்து நிவேதனம செய்யப்படும் சிவநிர்மால்யத்தை பூஜிப்பது குற்றமாகாது என்றும் அதை புஜித்து விசேஷ புண்ய பலனை பக்தர்கள் அடைவர் என்றும் அருள் செய்து வரங்கொடுத்து

அநுக்ரகம் செய்ததாகவும் விஷ்ணு அடியைக் காண்கிலேன் என உண்மையைக் கூறியதால் தனதருகிலேயே விஷ்ணுவுக்குப் பூஜை நடக்கும்படி அநுக்ரஹம் செய்ததாகவும் ஒரு புராண வரலாறு. மற்றொன்றுவது:— ஒரு சமயம் கைலாசத்திற்கு பிர்மா சிவனை வழிபடச் சென்றிருந்தபோது சிவனுக்கு நிகராக தனக்கும் ஐந்துதலைகள் உள்ளன என்று கர்வங்கொண்டு சிவனை வேத மந்திரங்களால் துதித்தபோது அக்கர்வத்தின் காரணமாக அம்முகங்களுலொரு முகம் வேத மந்திரத்தை கர்தப (கழுதை) ஸ்வரமாக பாடியது. அதைக் கேட்டு பரமசிவன் அதைக் காரணமாகக் கொண்டு அத்தலையைக் கொய்து அவரது கர்வத்தை அடக்கி உனக்கு எவ்விடத்திலும் வழிபாடு நடைபெறக்கூடாது என சபித்து அவரது வேண்டுகோளுக்கிணங்கி சிதம்பரத்தில் மட்டும் உனக்கு சண்டிகேச்வரருடன் சேர்ந்து வழிபாடு நடக்கக் கடவது என்று அருள் பாலித்தார் என்பது சண்டேசருடைய வரலாறை சண்டேச நாயனுர் புராணத்தில் காண்க.

பிறகு குடகரை வழியாக கிழக்கே சென்று இருபத்தோரு (21) படிக்கு மேல்புறத்தில் மண்டபத்திலுள்ள புருஷ மிருகத்தை சேவித்துவிட்டு கிழக்கு கோபுர வாயிலில் உள்ள விநாயகரை வழிபடுவோம்.

## ஸ்ரீ சிந்தாமணி விநாயகர்

தம் மங்மஹே மஹேசானம் மஹே சானப்ரியார்பகம் |
கணேசாநம் கரிகனேசா நநம் அநாமயம் ||

இவ்விநாயகர் கிழக்கு நோக்கி கோபுரத்தின் தென்புறத்தில் அமர்ந்துள்ளார். சிந்தாமணி என்னும் தேவலோக மணி பக்தர்கள் வேண்டியதை அளிப்பது போல் இவ்விநாயகரும் அவ்வாறு பக்தர்களுக்கு வேண்டிய வரங்களை வழங்குவதால் இவருக்கும் இப்பெயர் ஏற்பட்டது என்பார் பெரியோர்

## ஸ்ரீ வள்ளீசர்

ஏகானனம் சந்தன லேபிதாங்கம் மஹாத்புதம் திவ்ய
மயூரவாகனம் |
ருத்ரஸ்ய ஸூனும் சுரநாத புத்ரீ பதிம்ச வள்ளீசம்
உபாஸ்மஹே அனிசம் ||

இம்மூர்த்தி கீழ கோபுரத்தின் வடபுறத்தில் வள்ளி தேவசேனை இருநாயகிகளுடனும் மயிலுடனும் ஒரு முகத்துடனும் அழகாக பக்தர்களுக்கு வரம் பாலிக்க காக்ஷி அளிக்கின்ருர்.

## ஸ்ரீ தியாகராஜர்

த்யாகராஜம் மஹேசானம் கமலாலய வாஸினம் |
நமாமி பரயா பக்த்யா முசுகுந்த வரப்ரதம் ||

இம்மூர்த்தி திருவாரூரில் விளங்குபவர். இங்கு கீழ கோபுர வாசலுக்கு முன்புறமுள்ள புகுமுக மண்டபத்திற்கு தென்புற வெளி மண்டபத்தின் மேல் கோயில் கொண்டிருப்பவர் நடராஜதாண்டவ தரிசனத்திற்காக வந்தவர் ஒரு ஸமயம் ஸ்ரீ நடராஜமூர்த்தி திருவாரூர் சென்று சிலநாள் அங்கு தியாகராஜர் சந்நிதியில் தங்கின பொழுது ஒரு பக்தர் ஸ்ரீ நடராஜரை இவ்வாறு ச்லேஷையாக துதிக்கிருர்.

"அம்பராந்தம் நடித்வாபி சிதம்பர ஸபாபதே |
த்யாகார்த்தம் தியாக ராஜஸ்ய ஸந்நிதிம் ப்ராப்தவானஸி ||
என்று.

ஆகையால் இங்கும் தியாகராஜர் சன்னதியில் பக்தர்களுக்கு சிவ தர்சன பலத்தை அளிக்க ஸ்ரீ நடராஜமூர்த்தியே ஸான்னித்யம் கொண்டுள்ளதாகவும் பெரியோர் கூறுவர்.

இவரை வழிபட்டு சிறிது இங்கே அமர்ந்து மஹாபலி முதலிய பரமசிவனுடைய உத்தரவை பரிபாலிக்கும் பக்தர்

களை சிவசந்நிதிக்கு செல்லும்படியான மஹாபலிமுகா; ஸர்வே சிவாக்ஞாபரிபாலகா: | மயா நிவர்த்திதா: ஸந்த: கச்சந்து சிவஸந்நிதிம் || இம்மந்திரத்தைக் கூறிவிட்டு நமது மடம் சேருவோம் என்று கலாவதிக்கு கூறி அவளுடன் தன்னிருப்பிடம் அடைந்தான் மணிபத்ரன்.

ய:சிவ: நாமரூபாப்யாம் யாதேவி ஸர்வமங்களா |
தயோ: ஸம்ஸ் மரணாத் நித்யம் ஸர்வத: ஜயமங்களம்

## ஸ்ரீ சிதம்பர க்ஷேத்ர சிறப்புப் பதிகம்

துன்மதன் பாவந்தொலைத் தருளளிக்குமூர்
துச்சகன் கதியடையுமூர்
சோறுமறையோன் வாயில்ஓர் அன்னம் சிந்திகோடி
சொர்க்கவீடு எய்தவருமூர்
பொன்மயமதாய்க் கௌடதேச னுடலாகுமூர்
புலி பாம்பு தவ முயலுமூர்
புலையர் மூவர்கள் முத்தி பெற்றவூர்
இரைந்து புண்ய தீர்த்தஞ் சேருமூர்
சென்மநோய் தீருமூர்
முதுமைபோய் இளமையது திருநீலகண்டர் பெருமூர்
தில்லை மூவாயிரவருள் நான் ஒருவன் எனுமூர்
தெரிசிக்க முக்திதருமூர்
நன்மை தரு பாற்கடலமும் புலிக்குட்டிக்கு நல்குமூர்
நடராஜர் சிவகாமி யென்னுளும் வாழுமூர்
நன்மை தருகின்ற ஊரே !!

வாழ்க அந்தணர் வாணவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அறன்நாமம் ஓங்குக
சூழ்க வையகமும் துயர் தீர்க்கவே

மங்களம் !

# பிழை திருத்தம்.

| பக். | வரி | |
|---|---|---|
| 2 | 6 | ஸந்நிதியில் |
| 4 | 3 | தான்யத்ய |
| 5 | 20 | ஏற்படுமென |
| 6 | 18 | ஸித்தய: \| |
| 8 | 22 | வீரராக்ஷஸன் |
| 13 | 9 | நமோஸ்து ஸூர்யபுத்ராய |
| | | நதேஷ்ட பலதாயினே ॥ |
| | | என்று சேர்த்துக்கொள்ளவும். |
| 13 | 15 | ஸ்வ |
| | | தூரீசகார |
| 14 | 6 | ஷட்வக்த்ரம் |
| | 8 | தோர்பி: |
| | 12 | தக்ஷே |
| 15 | 16 | உற்சவங்களும் |
| 15 | 26 | நும : |
| 16 | 10 | விஷ்ணோ : |
| | | காரிணீ |

| பக். | வரி | |
|---|---|---|
| 16 | 11 | நிவாரிணீ |
| | 13 | ராஜ்ஞு : |
| 16 | 18 | பரமேச்வரர் |
| 17 | 10 | பூயோகிலாண்ட |
| | | ரமணீஸததார்ச்சிதாய |
| 19 | 9 | மோக்ஷ : |
| 22 | 6 | நடராஜமூர்த்தி |
| 23 | 9 | ஸைகதம் |
| 24 | 24 | மேற்கு |
| 25 | 1 | மறை |
| 26 | 5 | மௌக்திகீம் |
| 26 | 13 | சனகர் |
| 27 | 16 | அர்கஸி |
| 28 | 4 | முனீச்வரர்கள் |
| 29 | 7 | ஸ்வரூபம் |
| 29 | 10 | சிதம்பரம் |
| 30 | 23 | ஸைல |

| பக். | வரி | |
|---|---|---|
| 32 | 9 | எறிபத்த |
| 32 | 11 | கண்ணப்ப நாயனுர் |
| 33 | 7 | அத்புதீ |
| 34 | 11 | கஞ்ஜேலபர் |
| 35 | 8 | சம்புத்யாயி |
| 35 | 9 | மஹிளா |
| | | மஹிளேசீ |
| 35 | 10 | அருணுக்ஷர் |
| | | ஸ்ரீ சோணுக்ஷர் |
| 35 | 11 | யாழ்பாணை |
| 35 | 12 | கபர்தீ |
| 35 | 13 | சிவஞானினி — ஆதிசைவர் |
| 36 | 1 | அதிரஸவத்தான |
| 36 | 7 | ருசிரா |
| 36 | 9 | வடுவைஷவம் |
| 37 | 6 | மஹிஷீம் |
| 38 | 7 | சிதம்பரத்தை |
| | | த்யானித்து |
| 40 | 4 | உருக்கொண்டு |
| 40 | 5 | செய்வதற்காக |

| பக். | வரி | |
|---|---|---|
| 40 | 8 | ஸ்ரீநவக்ரஹங்கள் |
| 40 | 9 | ஸூர்யாய |
| 40 | 13 | தென்முகமாக |
| | | அங்காரகமூர்த்தியும் |
| 40 | 17 | மேற்குமுகமாக சனைச்சரமூர்த்தியும் |
| 40 | 18 | நிர்ரிதி |
| 42 | 23 | ஸர்பாரிரிம் |
| 43 | 20 | மாலாதரௌ |
| 44 | 3 | ஸததமேவம் |
| 44 | 23 | மஹாவேகம |
| 47 | 15 | வக்த்ராத்யாய : |
| | | பாரிஷத்யா : |
| 47 | 25 | வ்யாகரண |
| 48 | 3 | பிரானின் |
| 43 | 7 | பாட்டால் |
| 48 | 10 | க்ஷீரார்ணவாந்த : |
| | 11 | ஸமேத : |
| | 12 | குர்வன் |
| 49 | 6 | சாரிணீம் |
| 50 | 14 | காண்பேன் |

| பக். | வரி | |
|---|---|---|
| 50 | 21 | மகாலோகம் |
| 51 | 22 | நம : |
| 52 | 23 | விசிஷ்டா |
| 53 | 4 | பிக்ஷாடனர் |
| 53 | 6 | பவானிபதி : |
| 54 | 18 | ஸர்ப |
| 55 | 20 | ஐதிஹ்யம் |
| 55 | 26 | ப்ரோக்ஷண |
| 55 | 27 | பாபங்களும் |
| 56 | 5 | மஹர்ஷியும் |
| 56 | 25 | பர்ணசாலையில் |
| 58 | 9 | பதஞ்ஜலி |
| 59 | 28 | அஞ்ஜலியிலே |
| 59 | 30 | பதஞ்ஜலி |
| 60 | 28 | பதஞ்ஜலி |
| 60 | 31 | ஸம்ஸ்திதம் |

| பக் | வரி | |
|---|---|---|
| 60 | 32 | பதஞ்ஜலி |
| 65 | 7 | சுத்த |
| 67 | 5 | வ்யக்தாவ்யக்த |
| 67 | 24 | மௌளீச்வர |
| 68 | 5 | தேவ்யா |
| | | நடனம் |
| | | குஞ்சிதாங்க்ரிம்பஜே |
| 71 | 7 | ஆத்யாத்மிகி |
| 72 | 26 | மாஹாத்மியங்களின் |
| 76 | 11 | மாஹாத்மியத்தில் |
| 76 | 14 | பள்ளியறைக்கு |
| 76 | 15 | (ஊஞ்சலில்) |
| 77 | 1 | பாத |
| 78 | 27 | ப்ரக்ருத்யா |
| 79 | 10 | மட்டும் |
| 79 | 29 | நிவேதனம் |

